# காஞ்சனை

(சிறு கதைகள்)

"புதுமைப்பித்தன்"



கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை-4

 [விலை ரூ. 2-0-0

## எச்சரிக்கை!

காஞ்சனை முதலிய பதினொன்று கதைகளுக்குள் துணிந்து பிரவேசிக்க விரும்பும் வாசகர்களுக்கு, தலையெழுத்து அப்படியாகிவிட்ட விமரிசகர்களுக்கு, நம்முடைய கோஷ்டி இது என்று நினைத்துக்கொண்டு கும்மாளி போட்டு வரும் நண்பர்களுக்கு, முதல் முதலிலேயே எச்சரிக்கை செய்து விடுகிறேன். இவை யாவும் கலை உத்தாரணத்திற்கென்று கங்கணம் கட்டிக்கொண்டு செய்த சேவை அல்ல. இவை யாவும் கதைகள். உலகை உய்விக்கும் நோக்கமோ, கலைக்கு எருவிட்டுச் செழிக்கச் செய்யும் நோக்கமோ, எனக்கோ என் கதைகளுக்கோ சற்றும் கிடையாது. நான் கேட்டது, கண்டது, கனவு கண்டது, காண விரும்பியது, காண விரும்பாதது ஆகிய சம்பவக் கோவைகள்தாம் இவை.

இம்மாதிரி நான் முன் எச்சரிக்கை செய்ய வேண்டிய நிலைமை யாதோ எனின், இரண்டொரு வருஷங்களுக்கு முன் நான் 'புதுமைப் பித்தன் கதைகள்' என ஒரு கோவையை வெளியிட்டேன். என் மீது அபிமானமுடையவரும் கலையின் ஜீவன் சேமமாக இருக்க வேண்டும் என்ற ஆசையில் அதற்குத் தம் கையாலேயே எழுதுகோல் மாடம் கட்டி அதைச் சிறை வைக்க விரும்பியவருமான கலாரசிகர் ஒருவர், எனக்கும் அவருக்கும் பொதுவான நண்பர், ஒருவர் மூலம் நான் எப்பொழுது கதைகள் எழுதுவதை நிறுத்திக்கொள்ளப் போகிறேன் என்று ஆவலோடு கேட்டு விட்டார். அதற்குப் பதில் சொல்லுவது மாதிரி இப்போது இந்தக் கதைத் தொகுதியை வெளியிட்டிருக்கிறேன். பொதுவாக நான் கதை எழுதுவதன் நோக்கம் கலை வளர்ச்சிக்குத் தொண்டு செய்யும் நினைப்பில் பிறந்ததல்ல. அதனால்தான் என்னுடைய கதைகளில் இந்தக் கலை விவகாரத்தை எதிர்பார்க்க வேண்டாம் என்று எச்சரிக்க விரும்புகிறேன்.

இந்தக் கோவையிலே, என் கதைகளிலே மேலோட்டாகப் படிக்கிறவர்கள்கூட இரண்டு ரகமான வார்ப்புத் தன்மை இருப்பதைப் பார்க்கலாம். சில, 1943-ஆம் வருஷத்துச் சரக்கு. மீதியுள்ளவை 1936-க்கும் அதற்கு முன்பும் பிறந்தவை; 1943-ஆம் வருஷத்துச் சரக்குகளை 1943-ஆம் வருஷத்து ஆசாமிகள் பாராட்டுகின்றனர். அதைப் போலவே, 1936-ஆம் வருஷத்துச் சரக்கையும் அந்தக் காலத்து "இவர்கள்" பாராட்டினார்கள். பார்க்கப் போனால் பிஞ்சிலே பழுத்த மாதிரிதான் எனக்குப் படுகிறது. இந்தத் திரட்டு ஒரு வகையில் நல்ல மாதிரி என்பது என் நினைப்பு. என்னைப் பாராட்டுகிறவர்களும் என்னைக் கண்டு மிரண்டு ஓடுகிறவர்களும் மனசு பக்குவப்படும் முறையைக் கண்டுகொள்ள இது செளகர்யமான சந்தர்ப்பத்தை அளிக்கிறது. அப்படித் தான் நான் இதைப் பாவிக்கிறேன்.

1943-ஆம் வருஷத்துச் சரக்குகளைப் பற்றியே சில சர்ச்சைகள், அவை பிறந்த காலத்திலிருந்து இருந்து வருகின்றன. காரணம் பலருக்கு என் போக்கு என்ன என்பது புரியாதிருப்பதுதான்.

என் கதைகள் எதுவானாலும் அதில் அழகு காணுகிற நண்பர் ஒருவர் இந்தக் காஞ்சனைக் கதையைப் படித்துவிட்டு, என்னிடம் வந்து, "உங்களுக்குப் பேய் பிசாசுகளில் நம்பிக்கை உண்டா? ஏன் கதையை அப்படி எழுதினீர்கள்?" என்று கேட்டார். நான், "பேயும் பிசாசும் இல்லை என்றுதான் நம்புகிறேன். ஆனால் பயமாக இருக்கிறதே" என்றேன். "நீங்கள் சும்மா விளையாட வேண்டாம். அந்தக் கதைக்கு அர்த்தமென்ன?" என்று கேட்டார். "சத்தியமாக எனக்குத் தெரியாது" என்றேன். அவருக்கு இது திருப்தி இல்லை என்று தெரிந்து கொண்ட பிற்பாடு அவரிடமிருந்து தப்பித்துக்கொண்டு இலக்கியப் பக்குவம் மிகுந்த என் நண்பர் ஒருவரிடம் போனேன். அவர் அட்டகாசமாய் வரவேற்றார். ஜேம்ஸ் ஜாய்ஸ் மாதிரி

கதை எழுதி யிருப்பதாகவும் 'கயிற்றரவு' என்று சொல்லுவார்களே ஒரு மயக்க நிலை, அதை அழகாக வார்த்திருப்ப தாகவும் சொன்னார். இங்கிலீஷ் இலக்கியத்திலே கடைசிக் கொழுந்து என்று கருதப் படுகிறவர் ஜேம்ஸ் ஜாய்ஸ். அப்படிச் சொன்னால் யாருக்குத்தான் தலை சுற்றி ஆடாது? அங்கிருந்து வீட்டுக்கு வந்தேன். வார்த்தைகளை வைத்துக் கொண்டு ஜனங்களைப் பயங்காட்டுவது ரொம்ப லேசு என்பதைக் கண்டு கொண்டேன்.

காஞ்சனைக்குப் பிறகு சாப விமோசனம் இதே மாதிரி அவதிக்கு உள்ளாயிற்று. முக்கால் வாசிப் பேருக்கு அந்தக் கதை பிடிக்கவில்லை. காரணம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரி. விமரிசகர் 'சென்று தேய்ந்திறுதல்' என்றார். ஆனால் இன்னும் ஒருவர் வால்மீகி கதையில் அகலிகை கல்லாகவில்லை யென்றும் ஜனங்களுக்கு உண்மையைவிட உண்மையின் மீதுள்ள பாசிதான் கண்களுக்குப் பளபளப்பாக இருக்கிறது என்றார். பாசி என்பதுதான் என்ன? மனப் பக்குவத்தில் ஒரு நிலைதானே அதுவும்? அப்படிப் பார்க்கப் போனால் ஜனக ராகங்களிலிருந்து ஜன்ய ராகங்கள் பிறப்பது எல்லாமே பாசி தானே? தொன்னைக்கு நெய்தான் ஆதாரம் என்று கருதுகிற வர்கள் தாம், ஒரு குறிப்பிட்ட கோல வகையில்தான் எதுவும் அமைந்திருக்க முடியும் என்று நினைக்கிறார்கள். வேறு ஒரு விதமான கோலம் போட்டுக் காண்பிக்க முடியாது, கூடாது என்று கருதுகிறவர்கள் - இவர்கள் தத்துவவாதிகள். உலக சிருஷ்டி இவர்களுடைய தத்துவத்துக்குள் மட்டும் ஒடுங்கி விடவில்லை.

நான் கதை எழுதுகிறவன். கதையிலே கல் உயிர் பெற்று மனிதத்தன்மை அடைந்துவிடும். மூட்டைப் பூச்சிகள் அபிவாதயே சொல்லும். அதற்கு நான் என்ன செய்யட்டும்? கதையுலகத்தின் நியதி அது. நீங்கள் கண் கூடாகக் காணும் உலகத்தில், மனிதன் 'கல்லுப்

பிள்ளையார் மாதிரி' உட்கார்ந்திருப்பதைப் பார்க்க வில்லையா? மனிதன் கல் மாதிரி இருக்கும்போது கல் தான் சற்று மனிதன் மாதிரி இருந்து பார்க்கட்டுமே! தவிரவும் பழைய கதைகளை எடுத்துக்கொண்டு அதை இஷ்டமான கோணங்களிலெல்லாம் நின்றுகொண்டு பார்க்க எங்களுக்கு உரிமையுண்டு.

சாப விமோசனத்தைப் பற்றிய வரையில் எனக்கு ஒரே ஒரு குறைதான் உண்டு. அதில் வசிஷ்டனையும் கூனியையும் கூட்டிக்கொண்டு வர மறந்துபோனதுதான் அது. மற்றப்படி யார் எப்படிக் கருதினாலும் ராமாயணக் கதையின் அமைதி முற்றும் பொருந்தித்தான் இருக்கிறது.

கட்டிலைவிட்டிறங்காக் கதையில் நடை பலருக்கு ஆயாசமாகப் பட்டது. அதற்கு நான் என்ன செய்யட்டும்? அந்தக் காலத்தில் நடை அப்படித்தான் இருந்தது.

கடைசிக் கதை, கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும். திருப்பணியில் ஈடுபாடுடைய பக்தர்கள் பலருக்கு அவர்கள் ஆர்வத்துடன் செதுக்கி அடுக்கும் கலனுக் குவியலுக்கு இடையில் அகப்பட்டு நசுங்கிப் போகாமல் அவர்களுடைய இஷ்ட தெய்வத்தை நான் மெதுவாகப் பட்டணத்திற்குக் கூட்டிக் கொண்டு விட்டதில் பரம கோபம். நான் அகப்பட்டால் கழுவேற்றிப் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ள விரும்புவார்கள். என்னுடைய கந்தசாமிப் பிள்ளையுடன் ஊர் சுற்றுவதற்குத்தான் கடவுள் சம்மதிக்கிறார். இதற்கு நானா பழி?

பொதுவாக என்னுடைய கதைகள் உலகத்துக்கு உபதேசம் பண்ணி உய்விக்க ஏற்பாடு செய்யும் ஸ்தாபனம் அல்ல. பிற்கால நல்வாழ்வுக்குச் சௌகரியம் பண்ணி வைக்கும் இன்ஷ்யூரன்ஸ் ஏற்பாடும் அல்ல. எனக்குப் பிடிக்கிறவர்களையும் பிடிக்காதவர்களையும் கிண்டல் செய்து கொண்டிருக்கிறேன். சிலர் என்னோடு

சேர்ந்துகொண்டு சிரிக்கிறார்கள்; இன்னும் சிலர் கோபிக்கிறார்கள். இவர்கள் கோபிக்கக் கோபிக்கத்தான் அவர்களை இன்னும் கோபிக்கவைத்து முகம் சிவப்பதைப் பார்க்கவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. ஆனால் இப்படிக் கோபிப்பவர்கள் கூட்டம் குறையக் குறையத்தான் எனக்குக் கவலை அதிகமாகி வருகிறது.

இவை இன்ன மாதிரிதான் எழுதுவது வழக்கம், அதைப் பாராட்டுவது குறிப்பிட்ட மனப்பக்குவம் தமக்கு இருப்பதாகக் காட்டிக் கொள்ளும் கௌரவம் என்றாகி, என்னைச் சட்டம் போட்டுச் சுவரில் மாட்டிப் பூப்போட்டு மூடிவிடுவதுதான் என் காலை இடறி விடுவதற்குச் சிறந்த வழி. அந்த விளையாட்டெல்லாம் என்னிடம் பலிக்காது. மனப் போக்கிலும் பக்குவத்திலும் வெவ்வேறு உலகில் சஞ்சரிப்பதாக நினைத்துக் கொண்டு நான் வெகு காலம் ஒதுங்க முயன்ற கலைமகள் பத்திரிகை என் போக்குக்கெல்லாம் இடம் போட்டுக் கொடுத்து வந்ததுதான் நான் பரம திருப்தியுடன் உங்களுக்குப் பரிசயம் செய்து வைக்கும் காஞ்சனை. நீங்கள் இவைகளைக் கொள்ளாவிட்டாலும் நான் கவலைப் படவில்லை. வாழையடி வாழையாகப் பிறக்கும் வாசகர்களில் எவனோ ஒருவனுக்கு நான் எழுதிக்கொண்டிருப்பதாகவே மதிக்கிறேன்.

விமரிசகர்களுக்கு ஒரு வார்த்தை. வேதாந்திகள் கைக்குள் சிக்காத கடவுள் மாதிரிதான் நான் பிறப்பித்து விட்டவைகளும். அவை உங்கள் அளவு கோல்களுக்குள் அடைபடாதிருந்தால் நானும் பொறுப்பாளி யல்ல; நான் பிறப்பித்து விளையாட விட்டுள்ள ஜீவராசிகளும் பொறுப்பாளிகளல்ல; உங்கள் அளவுகோல்களைத்தான் என் கதைகளின் அருகில் வைத்து அளந்து பார்த்துக் கொள்ளுகிறீர்கள் என்று உங்களுக்குச் சொல்லிவிட விரும்புகிறேன்.

**23—12—43.** **"புதுமைப்பித்தன்"**

# பொருளடக்கம்

## காஞ்சனை

### 1

அன்று இரவு முழுவதும் எனக்குத் தூக்கம் பிடிக்கவேயில்லை. காரணம் என்னவென்று சொல்ல முடியவில்லை. மனசுக்குக் கஷ்டமும் இல்லை, அளவுக்கு மிஞ்சிய இன்பமும் இல்லை, இந்த மாதிரித் தூக்கம் பிடிக்காமல் இருக்க. எல்லோரையும் போலத்தான் நானும். ஆனால் என்னுடைய தொழில் எல்லோருடையதும் போல் அல்ல. நான் கதை எழுதுகிறேன்; அதாவது, எழுதி விட்டு, அதைச் சகிக்கும் பத்திரிகை ஸ்தாபனங்களிலிருந்து பிழைக்கிறவன்; என்னுடையது அங்கீகரிக்கப்படும் பொய்; அதாவது - கடவுள், தர்மம் என்று பல நாமரூபங்களுடன், உலக 'மெஜாரிட்டி'யின் அங்கீகாரத்தைப் பெறுவது; இதற்குத்தான் சிருஷ்டி, கற்பனாலோக சஞ்சாரம் என்றெல்லாம் சொல்லுவார்கள். இந்த மாதிரியாகப் பொய் சொல்லுகிறவர்களையே இரண்டாவது பிரம்மா என்பார்கள். இந்த நகல் பிரம்ம பரம்பரையில் நான் கடைக்குட்டி. இதை எல்லாம் நினைக்கப் பெருமையாகத்தான் இருக்கிறது. நாங்கள் உண்டாக்குவது போல், அந்தப் பிரமனின் கைவேலையும் பொய்தானா? நான் பொய்யா? திடீரென்று இந்த வேதாந்த விசாரம் இரவு சுமார் பன்னிரண்டு மணிப் போதுக்கு ஏற்பட்டால், தன்னுடைய ஜீரண சக்தியைப் பற்றி யாருக்குத்தான்

சந்தேகம் தோன்றுது? "அட சட்!" என்று சொல்லிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன்.

உட்கார்ந்தபடி எட்டிறைற் போல மின்சார விளக்கைப் போடுவதற்கு வாக்காக, வீட்டைக் கட்டி வைத்திருந்தான். போட்டேன். வெளிச்சம் கண்களை உறுத்தியது. பக்கத்துக் கட்டிலில் என் மனைவி தூங்கிக் கொண் டிருந்தாள். தூக்கத்தில் என்ன கனவோ? உதட்டுக் கோணத்தில் புன்சிரிப்பு - கண்ணும்பூச்சி விளையாடியது. வேதாந்த விசாரத்துக்கு மனிதனை இழுத்துக் கொண்டு போகும் தன்னுடைய நளபாக சாதுர்யத்தைப்பற்றி இவள் மனசு கும்மாளி போடுகிறது போலும்! தூக்கக் கலக்கத்தில் சிணுங்கிக்கொண்டு புரண்டு படுத்தாள். அவள் மூன்று மாசக் கர்ப்பிணி. நமக்குத் தான் தூக்கம் பிடிக்கவில்லை என்றால், அவளையும் ஏன் எழுப்பி உட்கார்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்?

உடனே விளக்கை அணைத்தேன். எனக்கு எப்போதும் இருட்டில் உட்கார்ந்துகொண் டிருப்பதில் ஒரு நிம்மதி. இருட்டோடு இருட்டாய், நாமும் இருட்டும் ஐக்கியமாய், பிறர் பார்வையில் விழாமல் இருந்து விடலாம் அல்லவா? நாமும் நம் இருட்டுக் கோட்டைக்குள் இருந்துகொண்டு நம் இஷ்டம்போல் மனசு என்ற கட்டை வண்டியை ஓட்டிக்கொண்டு போகலாம் அல்லவா? சாதாரணமாக எல்லோரும் மனசை நினைத்த இடத்துக்கு நினைத்த மாத்திரத்தில் போகும் ரதம் என்று சொல்லு வார்கள். மனித வித்து அநாதி காலந் தொட்டு இன்று வரையில் நினைத்து நினைத்துத் தேய்ந்து தடமாகிவிட்ட பாதையில் தான் இந்தக் கட்டை வண்டி செல்லுகிறது. சக்கரம் உருண்டு உருண்டு பள்ளமாக்கிய பொடிமண் பாதையும் நடுமத்தியில் கால்கள் அவ்வளவாகப் பாவாத

திரடுந்தான் உண்டு; ஒவ்வொரு சமயங்களில், சக்கரங்கள் தடம்புரண்டு திரடு ஏறி 'டொடக்' என்று உள்ளே இருக்கிறவர்களுக்கு அதிர்ச்சி கொடுக்கிறதும் உண்டு; மற்றப்படி சாதுவான, ஆபத்தில்லாத மயிலைக் காளைப் பாதை. நினைவுச் சுகத்தில் இருட்டில் சிறிது அதிகமாகச் சுண்ணும்பு தடவி விட்டேன் போலும்! நாக்கு, சுருக்கென்று பொத்துக்கொண்டது. நான் அதைப் பொருட்படுத்துவதில்லை. இருட்டில் வெற்றிலை போடுவது என்ருல், அதிலும் மனைசை, கயிற்றை முதுகில் போட்டுவிட்டுத் தானே போகும்படி விட்டு விடுவது என்ருல், இந்த விபத்துக்களையெல்லாம் பொருட்படுத்தலாமா? உள்ளங்கையில் கொட்டி வைத்திருந்த புகையிலையைப் பவித்திரமாக வாயில் போட்டுக் கொண்டேன்.

சீ! என்ன நாற்றம்! ஒரே யடியாகப் பிணவாடை அல்லவா அடிக்கிறது? குமட்டல் எடுக்க, புகையிலையின் கோளாருே என்று, ஜன்னல் பக்கமாகச் சென்று அப்படியே உமிழ்ந்து, வாயை உரசிக் கொப்புளித்துவிட்டு வந்து படுக்கையின்மீது உட்கார்ந்தேன்.

துர்நாற்றம் தாங்க முடியவில்லை, உடல் அழுகி, நாற்றம் எடுத்துப்போன பிணம்போல; என்னுல் சகிக்க முடியவில்லை. எனக்குப் புரியவில்லை. ஜன்னல் வழியாக நாற்றம் வருகிறதோ? ஊசிக் காற்றுக்கூட இழைய வில்லையே! கட்டிலை விட்டு எழுந்திருந்து ஜன்னலின் பக்கம் நடந்தேன். இரண்டடி எடுத்து வைக்கவில்லை; நாற்றம் அடியோடு மறைந்துவிட்டது. என்ன அதிசயம்! திரும்பவும் கட்டிலுக்கு வந்தேன். மறுபடியும் நாற்றம். அதே துர்க்கந்தம். கட்டிலின் அடியில் ஏதேனும் செத்துக் கிடக்கிறதோ? விளக்கை ஏற்றினேன்.

கட்டிலடியில் தூசிதான் தும்மலை வருவித்தது. எழுந்து உடம்பைத் தட்டிக்கொண்டு நின்றேன்.

தும்மல் என் மனைவியை எழுப்பி விட்டது. "என்ன, இன்னுமா உங்களுக்கு உறக்கம் வரவில்லை? மணி என்ன?" என்று சொட்டாவி விட்டாள்.

மணி சரியாகப் பன்னிரண்டு அடித்து ஒரு நிமிஷம் ஆயிற்று.

என்ன அதிசயம்! நாற்றம் இப்பொழுது ஒருவித வாசனையாக மாறியது. ஊதுவத்தி வாசனை; அதுவும் மிகவும் மட்டமான ஊதுவத்தி; பிணத்துக்குப் பக்கத்தில் ஏற்றி வைப்பது.

"உனக்கு இங்கே ஒரு மாதிரி வாசனை தெரியுதா?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லியே" என்றாள்.

சற்று நேரம் மோந்து பார்த்துவிட்டு, "ஏதோ லேசா ஊதுவத்தி மாதிரி வாசனை வருது; எங்காவது ஏற்றி வைத்திருப்பார்கள்; எனக்கு உறக்கம் வருது; விளக்கை அணைத்துவிட்டுப் படுங்கள்" என்றாள்.

விளக்கை அணைத்தேன். லேசாக வாசனை இருந்து கொண்டுதான் இருந்தது. ஜன்னலருகில் சென்று எட்டிப் பார்த்தேன். நட்சத்திர வெளிச்சந்தான்.

லேசாக வீட்டிலிருந்து ஜன்னல், வாசல், கதவுகள் எல்லாம் படபட வென்று அடித்துக் கொண்டன. ஒரு விநாடிதான். அப்புறம் நிச்சப்தம். பூகம்பமோ? நட்சத்திர வெளிச்சத்தில் பழந்தின்னி வெளவால் ஒன்று தன் அகன்ற தோல் சிறகுகளை விரித்துக்கொண்டு பறந்து சென்று எதிரில் உள்ள சோலைகளுக்கு அப்பால் மறைந்தது.

துர்நாற்றமும் வாசனையும் அடியோடு மறைந்தன. நான் திரும்பி வந்து படுத்துக்கொண்டேன்.

## 2

நான் மறுநாள் விடியற்காலம் தூக்கம் கலைந்து எழுந்திருக்கும்போது, காலை முற்பகலாகிவிட்டது. ஜன்னல் வழியாக விழுந்து கிடந்த தினசரிப் பத்திரிகையை எடுத்துக்கொண்டு வீட்டின் வெளி முற்றத்துக்கு வந்து பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்தேன். கிரீச்சிட்டு ஆட்சேபித்துவிட்டு அது என்னைச் சுமந்தது.

"ராத்திரி பூராவும் தூங்காமே இவ்வளவு நேரம் கழித்து எழுந்ததும் அல்லாமல், இப்படி வந்து உட்கார்ந்து கொண்டால், காப்பி என்னத்துக்கு ஆகும்?" என்று என் சகதர்மிணி பின்பக்கமாக வந்து நின்று உருக்கினாள். 'ஐக்கிய நாடுகளின் ஜரூர் மிகுந்த எதிர்த் தாக்குதல்களை தங்கு தடையில்லாமல் முன்னேறி வருவதில்' அகப்பட்டுக்கொண்ட ஜன நாயகத்திலும் உலக சமாதானத்திலும் உறுதி பிறழாத நம்பிக்கை கொண்ட எனக்குச் சற்றுச் சிரமமாகத்தான் இருந்தது.

"அது உன் சமையல் விஸ்தரிப்பையால வந்த வினை" என்று ஒரு பாரிசத் தாக்குதல் நடத்திவிட்டு எழுந்தேன்.

"உங்களுக்குப் பொழுது போகாமே என் மேலே குத்தம் கண்டு பிடிக்கணும்னு தோணிட்டா, வேறே என்னத்தைப் பேசப் போறிய? எல்லாம் நீங்கள் எழுதுகிற கதையைவிடக் குறைச்சல் இல்லே!" என்று சொல்லிக்கொண்டே அடுப்பங்கரைக்குள் புகுந்தாள்.

நானும் குடும்ப நியதிகளுக்குக் கட்டுப்பட்டு, பல்லைத் துலக்கி விட்டு, கொதிக்கும் காப்பித் தம்ளரைத் துண்டில் ஏந்தியபடி, பத்திரிகைப் பத்திகளை நோக்கினேன்.

அப்போது ஒரு பிச்சைக்காரி, அதிலும் வாலிபப் பிச்சைக்காரி, ஏதோ பாட்டுப் பாடியபடி, "அம்மா,

தாயே!" என்று சொல்லிக்கொண்டு வாசற்படியண்டை வந்து நின்றாள்.

நான் ஏறிட்டுப் பார்த்துவிட்டு, இந்தப் பிச்சைக் காரர்களுடன் மல்லாட முடியாதென்று நினைத்துக் கொண்டு பத்திரிகையை உயர்த்தி வேலி கட்டிக் கொண்டேன்.

"உனக்கு என்ன உடம்பிலே தெம்பா இல்லே? நாலு வீடு வேலே செஞ்சு பொழெச்சா என்ன?" என்று அதட்டிக்கொண்டே நடைவாசலில் வந்து நின்றாள் என் மனைவி.

"வேலே கெடச்சாச் செய்யமாட்டேனா? கும்பி கொதிக்குது, தாயே! இந்தத் தெருவிலே இது வரையில் பிடியரிசிகூடக் கிடைக்கவில்லே; மானத்தை மறைக்க முழத்துணி குடம்மா" என்று பிச்சைக்கார அஸ்திரங்களைப் பிரயோகிக்க ஆரம்பித்தாள்.

"நான் வேலே தாரேன்; வீட்டோடவே இருக்கியா? வயத்துக்குச் சோறு போடுவேன்; மானத்துக்குத் துணி தருவேன்; என்ன சொல்லுறே?" என்றாள்.

"அது போதாதா அம்மா? இந்தக் காலத்திலே அதுதான் யார் கொடுக்கிறா?" என்று சொல்லிக் கொண்டே என் மனைவியைப் பார்த்துச் சிரித்து நின்றாள்.

"என்ன, நான் இவளை வீட்டோடே ரெண்டு நாள் வெச்சு எப்படி இருக்கான்னுதான் பாக்கட்டுமா? எனக்குந்தான் அடிக்கடி இளைப்பு இளைப்பா வருதே" என்றாள் என் மனைவி.

"சீ! உனக்கு என்ன பைத்தியமா? எங்கேயோ கெடந்த பிச்சைக்காரக் கழுதையை வீட்டுக்குள் ஏத்த வேண்டும் என்கிறாயே! பூலோகத்திலே உனக்கு வேறே ஆளே அம்பிடலியா?" என்றேன்.

வெளியில் நின்ற பிச்சைக்காரி 'களுக்' என்று சிரித்தாள். சிரிப்பிலே ஒரு பயங்கரமான கவர்ச்சி இருந்தது. என் மனைவி, வைத்த கண் மாறாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள். மனசு முழுவதும் அந்த அநாமத்திடமே ஐக்கியமாகி விட்டதுபோல் இருந்தது.

"முகத்தைப் பார்த்தா ஆள் எப்படி என்று சொல்ல முடியாதா? நீ இப்படி உள்ளே வாம்மா" என்று மேலுத்தரவு போட்டுக்கொண்டு அவளை அழைத்துச் சென்றாள்.

உள்ளுக்குள்ளே பூரிப்புடன் அந்த மாய்மாலப் பிச்சைக்காரி பின் தொடர்ந்தாள். என்ன! நான் கண்களைத் துடைத்துக்கொண்டு அவள் பாதங்களையே பார்த்தேன். அவை தரைக்குமேல் ஒரு குன்றிமணி உயரத்துக்கு அந்தரத்தில் நடமாடின. உடம்பெல்லாம் எனக்குப் புல்லரித்தது. மனப் பிரமையா? மறுபடியும் பார்க்கும் போது, பிச்சைக்காரி என்னைப் புன்சிரிப்புடன் திரும்பிப் பார்த்தாள். ஐயோ, அது புன்சிரிப்பா! எலும்பின் செங்குருத்துக்குள் ஐஸ் ஈட்டியைச் செருகியதுமாதிரி என்னைக் கொன்று புரட்டியது அது!

என் மனைவியைக் கூப்பிட்டேன். அவள் வீட்டுக்குள் வருவது நல்லதற்கல்ல என்று சொன்னேன். இந்த அபூர்வத்தை வேலைக்காரியாக வைத்துக் கொள்ளத்தான் வேண்டும் என்று ஒரேயடியாகப் பிடிவாதம் செய்தாள். மசக்கை விபரீதங்களுக்கு ஓர் எல்லை இல்லையா? என்னவோ படு ஆபத்து என்றுதான் என் மனசு படக்குப் படக்கு என்று அடித்துக் கொண்டது. மறுபடியும் எட்டி அவள் பாதங்களைப் பார்த்தேன். எல்லோரையும்

போல் அவள் கால்களும் தரையில்தான் பாவி நடமாடின. இது என்ன மாயப் பிரமை!

தென்னலிராமன் கறுப்பு நாயை வெள்ளை நாயாக்க முடியாது என்பதை நிரூபித்தான். ஆனால் என் மனைவி, பிச்சைக்காரிகளையும் நம்மைப்போன்ற மனிதர்களாக்க முடியும் என்பதை நிரூபித்தாள். குளித்து முழுகி, பழசானாலும் சுத்தமான ஆடையை உடுத்துக்கொண்டால் யாரானாலும் அருகில் உட்கார வைத்துப் பேசிக்கொண்டிருக்க முடியும் என்பது தெரிந்தது. வந்திருந்த பிச்சைக்காரி, சிரிப்பு மூட்டும்படிப் பேசுவதில் கெட்டிக்காரி போலும்! அடிக்கடி 'களுக்' 'களுக்' என்ற சப்தம் கேட்டது. என் மனைவிக்கு அவள் விழுந்து விழுந்து பணிவிடை செய்வதைக் கண்டு நானே பிரமித்து விட்டேன். என்னையே கேலிசெய்து கொள்ளும்படியாக இருந்தது, சற்றுமுன் எனக்குத் தோற்றிய பயம்.

சாயந்தரம் இருக்கும்; கருக்கல் நேரம். என் மனைவியும் அந்த வேலைக்காரியும் உட்கார்ந்து சிரித்துப் பேசியபடி கதை சொல்லிக்கொண்டிருந்தார்கள். நான் முன் கூடத்தில் விளக்கேற்றிவிட்டு ஒரு புஸ்தகத்தை வியாஜமாகக் கொண்டு அவளைக் கவனித்த வண்ணம் இருந்தேன். நான் இருந்த ஹாலுக்கும் அவர்கள் இருந்த இடத்துக்கும் இடையில் நடுக்கட்டு ஒன்று உண்டு. அதிலே நான் ஒரு நிலைக்கண்ணாடியைத் தொங்கவிட்டு வைத்திருந்தேன். அவர்களுடைய பிம்பங்கள் அதிலே நன்றாகத் தெரிந்தன.

"நீ எங்கெல்லாமோ சுத்தி அலஞ்சு வந்திருக்கியே; ஒரு கதை சொல்லு" என்றாள் என் மனைவி.

"ஆமாம். நான் காசி அரித்துவாரம் எல்லா எடத்துக்கும் போயிருக்கிறேன். அங்கே, காசியிலே ஒரு

கதையைக் கேட்டேன்; உனக்குச் சொல்லட்டா?" என்றாள்.

"சொல்லேன்; என்ன கதை?" என்று கேட்டாள் என் மனைவி.

"அஞ்சுநூறு வருச மாச்சாம். காசியிலே ஒரு ராசாவுக்கு ஒத்தைக்கொரு மக இருந்தா. பூலோகத்திலே அவளைப்போல அளகு தேடிப் புடிச்சாலும் கெடெக்காதாம். அவளை ராசாவும் எல்லாப் படிப்பும் படிப்பிச்சாரு. அவளுக்குக் குருவா வந்தவன் மகாப் பெரிய சூனியக்காரன், எந்திரம், தந்திரம், மந்திரம் எல்லாம் தெரியும். அவனுக்கு இவமேலே ஒரு கண்ணு. ஆனா இந்தப் பொண்ணுக்கு, மந்திரி மவனெக் கட்டிக்கிடணும்னு ஆசை.

"இது அவனுக்குத் தெரிஞ்சுபோச்சு; யாருக்குத் தெரிஞ்சுபோச்சு? - அந்தக் குருவுக்கு........."

என்ன அதிசயம்! நான் அவள் சொல்லிக் கொண்டிருக்கும் கதையைக் கேட்டுக்கொண் டிருக்கிறேனா அல்லது கையில் உள்ள புஸ்தகத்தை வாசித்துக்கொண்டிருக்கிறேனா? கையிலிருப்பது 'சரித்திர சாசனங்கள்' என்ற இங்கிலீஷ் புஸ்தகம். அதிலே வாராணசி மகாராஜன் மகளின் கதை என் கண்ணுக்கெதிரே அச்செழுத்துக்களில் விறைத்துப் பார்த்துக்கொண் டிருந்தது. கையில் விரித்துவைத்த பக்கத்தில் கடைசி வாக்கியம், 'அந்த மந்திரவாதிக்கு அது தெரிந்துவிட்டது' என்ற சொற்றொடரின் இங்கிலீஷ் மொழிப்பெயர்ப்பு. மூளை சுழன்றது. நெற்றியில் வியர்வை அரும்பியது. என்ன, எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா! பிரித்துப் பிடித்து வைத்திருந்த பக்கத்திலேயே கண்களைச் செருகியிருந்தேன். எழுத்துக்கள் மங்க ஆரம்பித்தன.

இடீரென்று ஒரு பேய்ச்சிரிப்பு! வெடிபடும் அதிர்ச்சி யோடு என் மனசை அப்படியே கவ்வி உறிஞ்சியது. அதிர்ச்சியில் தலையை நிமிர்த்தினேன். எனது பார்வை நிலைக் கண்ணாடியில் விழுந்தது. அதனுள், ஒரு கோர உருவம் பல்லைத் திறந்து உன்மத்த வெறியில் சிரித்துக் கொண்டிருந்தது. எத்தனையோ மாதிரியான கோர உருவங்களைக் கனவிலும், சிற்பிகளின் செதுக்கி வைத்த கற்பனைகளிலும் பார்த்திருக்கிறேன். ஆனால் இந்தமாதிரி ஒரு கோரத்தைக் கண்டதே இல்லை. குரூபமெல்லாம் பற்களிலும் கண்களிலுமே தெறித்தது. முகத்தில் மட்டும் மோக லாகிரியை எழுப்பும் அற்புதமான அமைதி. கண்களிலே ரத்தப் பசி! பற்களிலே சதையைப் பிய்த்துத் தின்னும் ஆவல். இந்த மங்களான பிம்பத்துக்குப் பின்னால் அடுப்பு நெருப்பின் தீ நாக்குகள். வசமிழந்து அதையே பார்த்துக்கொண்டிருந்தேன். தோற்றம் கணத்தில் மறைந்தது; அடுத்த நிமிஷம் அந்தப் பிச்சைக் காரியின் முகமே தெரிந்தது.

"உன் பெயர் என்ன என்று கேட்க மறந்தே போயிட்டுதே" என்று மனைவி கேட்பது எனது செவிப் புலனுக்கு எட்டியது.

"காஞ்சனைன்னுதான் கூப்பிடுங்களேன். கதெலெ வர்ற காஞ்சனை மாதிரி. எப்படிக் கூப்பிட்டா என்ன! ஏதோ ஒரு பேரு" என்றாள் பிச்சைக்காரி.

என் மனைவியைத் தனியாக அங்கு விட்டிருக்க மனம் ஒப்பவில்லை. என்ன நேரக்கூடுமோ? பயம் மனசைக் கவ்விக்கொண்டால், வெடவெடப்புக்கு வரம்பு உண்டா?

நான் உள்ளே போனேன். இருவரும் குசாலாகவே பேசிக்கொண்டிருந்தனர்.

வலுக்கட்டாயத்தின் பேரில் சிரிப்பை வருவித்துக் கொண்டு நுழைந்த என்னை, "பொம்பளைகள் வேலை செய்கிற எடத்தில் என்ன உங்களுக்காம்?" என்ற பாணம் எதிரேற்றது.

காஞ்சனை என்று சொல்லிக்கொண்டவள் குனிந்து எதையோ நறுக்கிக்கொண்டிருந்தாள். விஷமம் துளும்பும் சிரிப்பு அவளது உதட்டின் கோணத்தில் துள்ளாடியது. நான் வேறு ஒன்றும் சொல்ல முடியாமல் புஸ்தக வேலியின் மறைவில் நிற்கும் பாராக்காரன் ஆனேன். மனைவியோ கர்ப்பிணி. அவள் மனசிலேயா பயத்தைக் குடியேற்றுவது? அவளை எப்படிக் காப்பாற்றுவது?

சாப்பிட்டோம். தூங்கச் சென்றோம். நாங்கள் இருவரும் மாடியில் படுத்துக் கொண்டோம். காஞ்சனை என்பவள் கீழே முன் கூடத்தில் படுத்துக் கொண்டாள்.

நான் படுக்கையில் படுத்துத்தான் கிடந்தேன். இமை மூட முடியவில்லை. எப்படி முடியும்? எவ்வளவு நேரம் இப்படிக் கிடந்தேனோ? இன்று மறுபடியும் அந்த வாசனை வரப்போகிறதா என்று மனம் படக்குப் படக்கென்று எதிர்பார்த்தது.

எங்கோ ஒரு கடிகாரம் பன்னிரண்டு மணி அடிக்கும் வேலையை ஆரம்பித்தது.

பதினோராவது ரீங்காரம் ஓயவில்லை.

எங்கோ கதவு கிரீச்சிட்டது.

திடீரென்று எனது கைமேல் கூரிய நகங்கள் விழுந்து பிருண்டிக்கொண்டு நழுவின.

நான் உதறி யடித்துக்கொண்டு எழுந்தேன். நல்ல காலம்; வாய் உளறவில்லை.

என் மனைவியின் கைதான் அசப்பில் விழுந்து கிடந்தது.

அவளுடையதுதானா?

எழுந்து குனிந்து கவனித்தேன். நிதானமாகச் சுவாசம் விட்டுக்கொண்டு தூங்கினாள்.

கீழே சென்று பார்க்க ஆவல்; ஆனால் பயம்!

போனேன். மெதுவாகக் கால் ஓசைப்படாமல் இறங்கினேன்.

ஒரு யுகம் கழிந்தது மாதிரி இருந்தது.

மெதுவாக முன் கூடத்தை எட்டிப் பார்த்தேன். வெளிவாசல் சார்த்திக் கிடந்தது. அருகிலிருந்த ஜன்னல் வழியாக விழுந்த நிலா வெளிச்சம், காலியாகக் கிடக்கும் பாயையும் தலையணையையும் சுட்டிக் காட்டியது.

கால்கள் எனக்குத் தரிக்கவில்லை. வெடவெட வென்று நடுங்கின.

திரும்பாமலே பின்னுக்குக் காலடி வைத்து நடந்து மாடிப்படி யருகில் வந்தேன். உயரச் சென்று விட்டாளோ?

விடுவிடு என்று மாடிக்குச் சென்றேன்.

அங்கே அமைதி.

பழைய அமைதி.

மனம் தெளியவில்லை.

மாடி ஜன்னலருகில் நின்று நிலா வெளிச்சத்தை நோக்கினேன்.

மனித நடமாட்டம் இல்லை.

எங்கோ ஒரு நாய் மட்டும் அழுது பிலாக்கணம் தொடுத்து ஒடுங்கியது.

பிரம்மாண்டமான வௌவால் ஒன்று வானத்தின் எதிர்கோணத்திலிருந்து எங்கள் வீடு நோக்கிப் பறந்து வந்தது.

வெளியே பார்க்கப் பார்க்கப் பயம் தெளிய ஆரம்பித்தது. என்னுடைய மனப்பிரமை அது என்று நிதானத்துக்கு வந்தேன்.

ஆனால் கீழே!

மறுபடியும் பார்க்கவேண்டும் என்ற ஆவல்.

கீழே இறங்கினேன்.

தைரியமாகச் செல்ல முடியவில்லை.

அதோ! காஞ்சனை பாயில் உட்கார்ந்துதான் இருக்கிறாள். என்னைப் பார்த்துச் சிரித்தாள், விஷச் சிரிப்பு. உள்ளமே உறைந்தது. நிதானமாக இருப்பவனைப் போலப் பாசாங்கு செய்துகொண்டு, "என்ன, தூக்கம் வரவில்லையா?" என்று முணுமுணுத்துக் கொண்டே மாடிப் படிகளில் ஏறினேன்.

அப்பொழுது சாம்பிராணி வாசனை வந்ததா? வந்தது போலத்தான் ஞாபகம்.

நான் எழுந்திருக்கும் போது நெடுநேரமாகி விட்டது.

"என்ன, வரவரத்தான், இப்படித் தூங்கித் தொலைக்கிறது; காப்பி ஆறுது!" என்று என் மனைவி எழுப்பினாள்.

## 3

இருட்டுக்கும் பயத்துக்கும் ஒளிவிடம் இல்லாத பகலிலே எல்லாம் வேறு மாதிரியாகத்தான் தோற்றுகிறது. ஆனால், மனசின் ஆழத்திலே, அந்தப் பயம் வேரூன்றி விட்டது. இந்த ஆபத்தை எப்படிப் போக்குவது?

தன் மனைவி சோரம் போகிறாள் என்ற மனக் கஷ்டத்தை, தன்னைத் தேற்றிக் கொள்வதற்காக

வேறு யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியுமா? அதே மாதிரிதான் இதுவும். என்னைப் போன்ற ஒருவன், ஜன சமுதாயத்துக்காக இலக்கிய சேவை செய்கிறேன் என்று தம்பட்டம் அடித்துக்கொண்டு மனப்பால் குடித்துக்கொண் டிருக்கும் ஒருவன், "ஸார், எங்கள் வீட்டில் புதுசாக ஒரு பேய் குடிவந்து விட்டது. அது என் மனைவியை என்ன செய்யுமோ என்று பயமாக இருக்கிறது; ஆபத்தைப் போக்க உங்களுக்கு ஏதாவது வழி தெரியுமா?" என்று கேட்டால், நான் நையாண்டி செய்கிறேனா அல்லது எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்று தான் சந்தேகிப்பான். யாரிடம் இந்த விவகாரத்தைச் சொல்லி வழி தேடுவது? எத்தனை நாட்கள் நான் பாராக் கொடுத்துக்கொண் டிருக்க முடியும்?

இது எந்த விபரீதத்தில் கொண்டு போய் விடுமோ? சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் திண்டாடிக்கொண் டிருந்தேன். என் மனைவிக்கு அந்தப் புதிய வேலைக்காரி என்ன சொக்குப் பொடி போட்டு விட்டாளோ? அவர்கள் இருவரும் மனசில் துளிக்கூடப் பாரமில்லாமல் கழித்து விட்டார்கள்.

இன்றைப் பார்த்துப் பகலும் இராத்திரியை விரட்டிக்கொண்டு ஓடிவந்தது. இவ்வளவு வேகமாகப் பொழுது கழிந்ததை நான் ஒரு நாளும் அநுபவித்ததில்லை.

இரவு படுக்கப் போகும் போது என் மனைவி, "காஞ்சனை, இன்றைக்கு மாடியிலேயே நமக்கு அடுத்த அறையில் படுத்துக் கொள்ளப் போகிறாள்" என்று கூறி விட்டாள். எனக்கு மடியில் நெருப்பைக் கட்டியது போல ஆயிற்று.

இது என்ன சூழ்ச்சி!

இன்று தூங்குவதே இல்லை. இரவு முழுவதும் உட்கார்ந்தே கழிப்பது என்று தீர்மானித்தேன்.

"என்ன படுக்கலியா ?" என்றாள். என் மனைவி.

"எனக்கு உறக்கம் வரவில்லை" என்றேன். மனசுக்குள் வல் ஈட்டிகளாகப் பயம் குத்தித் தைத்து வாங்கியது.

"உங்கள் இஷ்டம்" என்று திரும்பிப் படுத்தாள். அவ்வளவுதான். நல்ல தூக்கம் ; அது வெறும் உறக்கமா ?

நானும் உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப் போனேன்.

சற்றுப் படுக்கலாம் என்று உடம்பைச் சாய்த்தேன்.

பன்னிரண்டு மணி அடிக்க ஆரம்பித்தது.

இதென்ன வாசனை !

பக்கத்தில் படுத்திருந்தவள் அமானுஷ்யக் குரலில் வீரிட்டுக் கத்தினாள். வார்த்தைகள் ரூபத்தில் வரும் உருவற்ற குரல்களுக்கு இடையே காஞ்சனை என்ற வார்த்தை ஒன்றுதான் புரிந்தது.

சட்டென்று விளக்கைப் போட்டுவிட்டு அவளை எழுப்பி எழுப்பி உருட்டினேன்.

பிரக்ஞை வரவே, தள்ளாடிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள், "ஏதோ ஒன்று என் கழுத்தைக் கடித்து ரத்தத்தை உறிஞ்சின மாதிரி இருந்தது" என்றாள் கண்களைத் துடைத்துக்கொண்டு.

கழுத்தைக் கவனித்தேன். குரல்வளையில் குண்டூசி நுனிமாதிரி ரத்தத்துளி இருந்தது. அவள் உடம்பெல்லாம் நடுங்கியது.

"பயப்படாதே ; எதையாவது நினைத்துக்கொண்டு படுத்திருப்பாய்" என்று மனமறிந்தும் பொய் சொன்னேன்.

அவள் உடம்பு நடுநடுங்கிக்கொண் டிருந்தது. மயங்கிப் படுக்கையில் சரிந்தாள்.

அதே சமயத்தில் வெளியில் சேமக்கலச் சப்தம் கேட்டது.

கர்ணகடூரமான குரலில் ஏதோ ஒரு பாட்டு.

அதிகாரத் தோரணையிலே, "காஞ்சனை! காஞ்சனை!" என்ற குரல்.

என் வீட்டை கிடுகிடாய்த்துப் போகும்படியான ஓர் அலறல்! கதவுகள் படபடவென்று அடித்துக் கொண்டன.

அப்புறம் ஓர் அமைதி. ஒரு சுடுகாட்டு அமைதி.

நான் எழுந்து வெளிவாசலின் பக்கம் எட்டிப் பார்த்தேன்.

நடுத் தெருவில் ஒருவன் நின்றிருந்தான். அவனுக்கு என்ன மிடுக்கு!

"இங்கே வா" என்று சமிக்ஞை செய்தான்.

நான் செயலற்ற பாவைபோலக் கீழே இறங்கிச் சென்றேன்.

போகும்போது காஞ்சனை இருந்த அறையைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. நான் எதிர்பார்த்தபடியே தான் இருந்தது. அவள் இல்லை.

தெருவிற்குப் போனேன்.

"அம்மா நெத்தியிலே இதைப் பூசு. காஞ்சனை இனி மேல் வரமாட்டாள். போய் உடனே பூசு. அம்மாவை எழுப்பாதே" என்றான்.

விபூதி சுட்டது.

நான் அதைக் கொண்டுவந்து பூசினேன், அவள் நெற்றியில். அது வெறும் விபூதிதானா! எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. அவன் கையில் சேமக்கலம் இல்லை என்பதும் ஞாபகம் இருக்கிறதே!

மூன்று நாட்கள் கழிந்துவிட்டன.

காலையில் காப்பி கொடுக்கும்போது, "இந்த ஆம்பிளைகளே இப்படித்தான்!" என்றாள் என் மனைவி. இதற்கு என்ன பதில் சொல்ல?



# புதிய கூண்டு

## 1

அருவங்குளம் என்ற நாரணம்மாள்புரம் தாமிர வருணியின் வடகரையில் ஒரு சிறு கிராமம். சுற்றிலும் தோப்புத்துரவு; கண்ணுக்கெட்டிய வரையில் வயல்கள்; அதாவது, திருநெல்வேலி ஜில்லாவின் வசீகர சக்தியின் ஒரு பகுதி அது.

சாயங்காலம்.

வேனிற்கால ஆரம்பமாகையால், இரண்டாவது அறுவடை சமீபித்து விட்டது. பயிர்கள் பொன்னிறம் போர்த்து, காற்றில் அலைபோல் நிமிர்ந்து விழுந்து, ஆகாயத்தில் நடக்கும் இந்திர ஜாலங்களுக்குத் தகுந்த, அசைந்தாடும் பொற்பீடமாக விளங்கியது.

அகன்ற மார்பில் யக்ஞோபவீதம்போல், ஆற்றில் நீர் பெயருக்கு மட்டிலும் ஓடிக்கொண்டிருந்தது. நீர், ஸ்படிகம்போல் களங்கமற்று மனிதனைக் குனிந்து அள்ளிக் குடிக்கும்படி வசீகரித்தது.

ஆற்றுமணலில் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பும் இரு மாணவர்கள் நடந்துகொண்டிருந்தனர். இருவருக்கும்

ஒரு கையில் புஸ்தகம், மற்ெறாரு கையில் போஜனப் பாத்திரம் என்ற மாணவ சின்னங்கள். இருவரும் 'குடுத்துணி' மட்டும் அணிந்து இடையில் ஒரு நாட்டு வேஷ்டி கட்டியிருந்தனர். ஒருவன் மூத்தவன்; இன்னொருவன் சற்று வயசில் குறைந்தவன். இருவரும் சகோதரர் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை; முகத்தோற்றமே தெரிவிக்கும். இருவரும் நல்ல அழகர்கள். மூத்தவன் அதி தீக்ஷண்ய புத்தியுடையவனாயினும் கறுத்த கண்களும், கூரிய நாசியும், சற்று அகன்ற நெற்றியும் சற்றுத் தடித்த ஆனால் அழகான உதடுகளும் அவன் சிறிதே உணர்ச்சி வசப்படுகிறவன் என்பதைத் தெரிவித்தன. தம்பியின் மெல்லிய உதடுகள் திடசித்தமும், எதையும் தனது அறிவுத் தராசில் போட்டு நிறுக்கும் உறுதியும் உடையவன் என்பதையும் தெரிவித்தன. இருவரும் ஒற்றை நாடியான சரீரம். அவர்கள் குடுமி, தற்கால அழகுணர்ச்சியைத் திருப்தி செய்யாமல் குறுக்கே விழுந்தாலும், பொதுவாக அவர்களைப் பார்த்ததும் அழகர்கள் என்பதை எடுத்துக் காட்டத் துணை புரிந்தன.

இருவரும் மிக வேகமாக நதியைக் கடந்தனர். முகத்தின் சோர்வும் களைப்பும் அவர்களைப் பேச விடாமல் தடுத்து, வீடு என்ற ஒரே எண்ணத்தை மனசில் நிறுத்தியதால் அவர்கள் மிக வேகமாகச் சென்றார்கள்.

தோப்பைத் தாண்டியதும் திடீரென்று ஒரு வரிசை வீடுகள்; தெருவின் மேற்குக் கோடியில் ஒரு கோயில்; அதுதான் நாரணம்மாள் புரம் என்ற அக்கிரகாரம்.

நாரணம்மாள் புரம் மகா விஷ்ணுவின் பெயரை வைத்துக்கொண்ட மட்டிலேயே திருப்தி யடைந்தது.

செல்வம் என்பது என்னவென்று கேட்கக் கூடிய மாதிரி, அதன் சகோதரனின் ஆதிக்கம் அங்கே தாண்டவமாடியது.

* * * *

மீனாட்சியம்மாள் ஒரு விதவை. தகப்பனார் வீட்டில் தரித்திரம். துக்ககம், நம்பிக்கையைக்கொண்டு உயிர் வைத்திருக்க வேண்டிய இடம். போதாதற்கு இரண்டு ஆண் குழந்தைகளின் பொறுப்பை அவள் தலையில் சுமத்திவிட்டு, அவள் கணவன் இந்த உலகத்தை நீத்தார். அந்த மட்டில் பெண் சுமையை ஏற்றாமல் போனாரே என்ற ஆறுதல்தான் அவளுக்கு.

மீனாட்சியம்மாள், இட்டிலி, முறுக்கு, அப்பளம்இட்டு அவைகளிலே தன் இரண்டு பொறுப்புக்களின் சம்ரட்சணையையும் நடத்தி வருகிறாள். பாதிரிகளின் பள்ளிக் கூடத்துப் புண்ணியவான்களின் உதவியால் தன் புத்திரர்களுக்குக் கல்வி என்ற மகத்தான கண் திறக்கப் படுவதற்காகத் தனது பூஜைகளில் அவர்களுக்காகக் குல தெய்வத்தை மீனாட்சியம்மாள் தொழுது வந்தாள். இப்பொழுதும் வெள்ளைக்காரன் என்றால் மீனாட்சியம்மாளுக்குத் தெய்வத்திற்கு நிகர். தன் புத்திரர்களுக்குக் கல்வியை இலவசமாகப் போதிக்கும் தயாநிதிகளை யார்தாம் போற்றாமல் இருப்பார்கள்!

வீட்டு முற்றத்தில் 'அம்மா' என்ற குரல் தன் புத்திரர்கள் வந்துவிட்டார்கள் என்பதைத் தெரிவித்தது. புறக்கடையில் உளுந்து கழுவிக்கொண் டிருந்த மீனாட்சியம்மாள், "அம்பியா? அண்ணாவும் வந்தாச்சோ? கையைக் காலைக் கழுவிப்பிட்டு, இந்த உறியிலே முறுக்கு வெச்சிருக்கேன்; எடுத்துச் சாப்பிடுங்கோ. கையிலே உளுந்து இருக்கு" என்றாள்.

அம்பி புஸ்தகத்தை வைத்துவிட்டு வருமுன், அவனுடைய மூத்த சகோதரன், புஸ்தகத்தை ஜன்னலில் வைத்துவிட்டுக் கால் முகம் கழுவ நேரே புறக்கடைக்கு ஓடி வந்தான். வைத்த அவசரத்தில் புஸ்தகங்கள் கீழே விழுந்தன. அம்பி அதையும் ஜாக்கிரதையாக எடுத்து வைத்துவிட்டுச் சட்டையைக் கழற்றிய பிறகு உள்ளே வந்தான்.

"என்னடா, தீட்டையும் கீட்டையும் அப்படியே உள்ளுக்குக் கொண்டுவர்றே? அம்பிக்கு இருக்கிற புத்தி கூட, ஏண்டா கிட்டு — ஹூம் நான்தான் பொண்ணைப் பிறந்தேனே..." என்று தலையில் அடித்துக்கொண்டாள்.

கிட்டு சிரித்துக்கொண்டே, "அம்மா, உன்னைத் தொட்டு விடுவேன்; பேசாதே" என்று நெருங்கினான்.

"அடே, கட்டேலெ போறவனே, சித்தெ மடியா கிடியா இரு" என்று பதறினாள் மீனாட்சி.

"என்னடா கிட்டா, அம்மா கிட்ட என்னடா! அவளுக்குத் தெரியுமோ" என்றான் அம்பி.

இருவரும் காலைக் கழுவி விட்டு, தாய் வைத்திருந்த முறுக்கைச் சாப்பிட்டுவிட்டு ஆற்றங்கரைப் பக்கம் நடந்தார்கள்.

"அம்பி, பரீக்ஷை நெருங்குகிறதே" என்றான் கிட்டு.

"அதற்கென்ன அண்ணா! பயமில்லை" என்று சொல்லிவிட்டுத் தன் நண்பன ஒருவனைத் தேடிக்கொண்டு சென்று விட்டான்."

கிட்டு என்ற கிருஷ்ணமூர்த்தி இந்த வருஷம் பி. ஏ. பரீட்சைக்குச் செல்ல இருக்கிறான். அவன் சகோதரன் அம்பி, — அவன் பெயர் ராமசாமி - இண்டர்மீடியட் பரீட்சைக்குப் போகிறான். இருவரும் பாளையங்கோட்டையில் இருக்கும் கிறிஸ்தவக் கலாசாலையில் படிக்கிறார்கள்.

கிட்டு, தனக்குப் பரீட்சை தேறியதும் குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு குடும்ப சம்ரட்சணையில் களைத்த தன் தாயின் கவலையை நீக்கிவிடுவான் என்பதுதான் அவர்கள் தற்போது கொண்ட லட்சியம். மேலும் சகோதரனது கல்விக்கு இனியாவது தர்மத்தை எதிர்பாராது இருக்கவேண்டும் என்பதும் அவன் நோக்கம்.

## 2

பாளையங்கோட்டை கிறிஸ்தவக் கலாசாலை ரோமன் கத்தோலிக்க மதத்தினருடையது. அதாவது இருள் சூழ்ந்த பிரதேசங்களில் கர்த்தருடைய மதத்தைப் பரப்ப ரோமாபுரியிலிருந்து அனுப்பப்படும் கருவி. தன் கையை வைத்தே தன் கண்ணில் குத்திக் கொள்ள வைப்பது போல், பழகிய யானையை வைத்துக் கொண்டு காட்டு யானைக் கூட்டங்களைப் பிடிப்பது போல், இந்தத் தொழில் நடந்து வந்தது.

ஞானதிக்கம் என்ற கிறிஸ்தவச் சாமியாருக்குக் கிட்டுவின் மீதும், அம்பியின் மீதும் ஒரு கண். அதாவது ரோமாபுரியில் பேதுரு அப்போஸ்தலர் கட்டிய மகத்தான கோவிலின் சக்தியைப் பரப்ப இந்த இருவரும் ஏற்றவர்கள் என்பது அவர் துணிபு. அதனால் இருவரைப் பற்றியும் அவர் மிக்க கவலை மேற் கொண்டார். இது மறை முகமாகவே நடந்தது. ஆனால் நாளடைவில் கிட்டுவை மிக எளிதில் வசப்படுத்தி விடலாம் என்றும், அம்பியிடம் தம் முயற்சி சாயாது என்றும் கண்டு கொண்டார். ரோமாபுரி போப்பின் ஆதிக்கத்தையும், கர்த்தரின் பரிசுத்தமான வார்த்தைகளையும் பரப்புவதற்கு எத்தனையோ வழிகள் உண்டு.

ஞானதிக்கம் சாமியார் ஓர் உண்மைக் கத்தோலிக்க பாதிரியார். அவர் தமக்குத் தோன்றிய உண்மைகளுக்குத் தம் முழு வாழ்க்கையையும் அர்ப்பணம் செய்தவர். அம்பியையையும் வசப்படுத்துவதற்கு ஒரு புது வழியைத் தேடிக்கொண் டிருந்தார். ஏனெனில் அம்பியிடம கிறிஸ்தவ தர்மத்தையும் ஹிந்து சமயத்தின் தவறுகளையும் பற்றித் தர்க்கிக்க ஆரம்பித்தால் அவன் அதற்கு இடம் கொடுப்பதே இல்லை. "தர்க்க சாஸ்திரமும் சமயமும் ஒத்துவராது; வேண்டுமானால் எங்கள் பண்டிதர்களிடம் தர்க்கம் செய்து கொள்ளுங்கள்" என்று கூறிவிடுவான். ஆனால் கிட்டுவை, உணர்ச்சியில் மயங்கக்கூடிய கிட்டுவைத் தர்க்கத்திற்கு இழுக்காமல், கிறிஸ்தவ நாயன்மார்களின் தியாகத்தையும் தரிசனத்தையும் காண்பிக்கும் இலக்கியங் களினால் பண்படுத்தி வந்தார்.

## 3

ஸ்ரீ ஜான் சகரியாஸ் நாடாரின் முன்னோர்கள், புரோட்டஸ்டாண்ட் கிறிஸ்தவ மதத்தைத் தழுவியது, திருநெல்வேலி ஜில்லாவிலே ஒரு ரஸமான கதை. 19-ம் நூற்றாண்டின் இறுதியில், இங்கிலாந்து, வியாபாரப் பொருள் உற்பத்தி முறையில் ஒரு நூதன வழியைக் கடைப் பிடித்தது. பொருள்களை ஏக காலத்தில் நூற்றுக் கணக்காகச் செய்து குவிப்பதில் பெரும் நம்பிக்கை வைத்தது; அதே சமயத்தில் பாதிரிகள், இந்தியாவின் தெற்கு மூலைகளில் நூற்றுக் கணக்காக ஞான ஸ்நானம் கொடுப்பதில் நம்பிக்கை வைத்தார்கள். அவர்கள் நாசரேத், மெய்ஞ்ஞான புரம் முதலிய பிரதேசங்களில் வந்ததும், முன்பு, கிறிஸ்து பிறப்பதற்கு நெடுங் காலத்திற்கு முன்பு, "உண்டாகுக" என்று கர்த்தர்

அருளியதும், உலகம் அவர் போட்ட வரிசைப்படி தழைத்து அப்பெருமானுக்குக் களிப்பூட்டியதாம். இதைப்போல இந்தப் பாதிரிகளும் அந்தப் பிரதேசங்களை அடைந்ததும், தாங்களே கர்த்தர் பெருமான் என்று நினைத்துக் கொண்டனரோ என்னவோ? அங்கிருந்த நாடார்களை நீரைத் தெளித்து, 'நீங்கள் கிறிஸ்தவர்களாகக் கடவது!' என்றதன் பயனாக விளைந்தவற்றில், சகரியாஸ் குடும்பமும் ஒன்று.

அவர் அங்கிருந்த புரோட்டஸ்டாண்ட் பள்ளிக் கூடத்தின் தலைமையாசிரியர். தமக்குக் கர்த்தருடைய கருணை கிடைத்தபோதெல்லாம் அஞ்ஞானிகளுக்கு விழிப்பைக் கொடுப்பதில் முனைந்து வந்தார்.

அவருக்கு ஒரு புதல்வி. எந்த மதத்தினராலும், உபாத்தியாயர்களுக்கு மட்டும் வம்ச விருத்தியில் தனிச் சிறப்பு உண்டு. அதற்கு விலக்காக இருந்தார் ஸ்ரீ சகரியாஸ். அவருக்கு அந்தப் புதல்வியே மகன், மகள் என்ற இரண்டு ஸ்தானத்தையும் நிரப்பி வந்தாள். அவள் பெயர், லில்லி அற்புதம் ஜயலக்ஷ்மி. அவள்தான் அவர்கள் குடும்பத்தின் விளக்கு; உயிர் நாடி; அதாவது அவள்தான் அந்த வீட்டில் ஒரு முஸோலினியின் ஏதேச்சாதிகாரத்தை ஸ்தாபித்து வந்தாள். பிரேமையினால், தாய் தந்தையர் இருவரும் அவளுக்கு அடிமைகள்.

அவளுடைய அழகு ஆளை மயக்கும் போதைப் பொருள் போன்றதல்ல; மனசில் கனவுகளைத் தோற்றுவிக்கும் ஓர் இன்பகரமான மோகன அழகு. அதன் பின்னே ஒரு சாந்தியின் சோபை, அவளுடன் பேசுவதில் பெரும் இன்பத்தைக் கொடுத்தது. தமிழ்க் கவிஞர்களின் கனவுகள் எல்லாம் திரண்டு வடிவெடுத்தது போன்றது அவள் தேக அமைப்பு.

கிறிஸ்தவ சமூகத்தின் சுதந்திரமும், சிறுமைப் புத்தியும், அறிவும் படைத்தவள். கணக்கு, விஞ்ஞானம் முதலியவற்றில் ஒருவிதப் பிரேமை; அதில் ஆசையோடு ஈடுபட்டவள் என்று கூற முடியாது. பள்ளிக்கூட உலகத்திலே, அந்தப் பாடங்களைப் படிப்பவர்கள் எல்லாரும் பெரிய மேதாவிகள் என்ற ஓர் அபிப்பிராயத்தை உபாத்தியாயர்களும் மாணவர்களும் சேர்ந்து வளர்த்து வருகிறார்கள். இதனால் ஏற்படும் ஒரு போட்டி மனப்பான்மையில் அவள் அதைப் படிக்க ஆரம்பித்திருக்கலாம். ஆனால் கலாசாலையைப் பொறுத்தவரையில், அவர்கள் 'மார்க்கு' என்ற அளவுகோலைப் பொறுத்தவரையில் அவள் கெட்டிக்காரிதான்.

இவள் தெரிந்தெடுத்த பாடங்களை உடையது அந்தக் கத்தோலிகர் கலாசாலை ஒன்றுதான். அதனால் அவள் அங்கே சென்று படிக்கவேண்டிய தாயிற்று.

வகுப்பில் இரண்டு கெட்டிக்காரர்கள் இருந்தால் இரண்டு பேர்களுக்கும் நட்பு ஏற்படுவது இயற்கை; பகைமை ஏற்படுவதும் சகஜம். இவை இரண்டும் அற்று இருப்பது விதிக்கு விலக்கு. ஆனால் ஒன்று ஆணும், மற்றது பெண்ணுமாக இருந்தால்...? அது.........தான் நடக்கவில்லை.

அம்பி, ஹிந்து தர்மம் என்றால் ஏதோ புனிதமான பொருள் என்று அவளை வெறுப்புக் கண்களால் நோக்கினான். அது கிறிஸ்தவக் கலாசாலையில் படிக்கும் மாணவர்களுக்கு உண்டாகும் ஒரு தனி மனப்பான்மை. சில சமயம் அசட்டுச் சமய வெறி என்ற மூடக்கொள்கை வரையில் கொண்டுபோய் விட்டுவிடும், அம் மனப்பான்மை. நல்ல காலம், அம்பிக்கு இந்த வியாதி பீடிக்கவில்லை. ஏதோ அவன் வயசிற்கு மேற்பட்ட அதிதீக்ஷண்ய அறிவில்

ஹிந்து தர்மத்தின் உயிர் நாடியை அறிந்து கொண்டான். அதனால் அவளைப் பார்க்குந்தோறும் ஒரு பரிதாபம் அவனுக்குத் தோன்றும். ஹிந்துப் பெண்ணாக, நாடாராகவே இருந்துவிட்டாலும் காதலிக்கலாம் என்ற கனவில் இருப்பவனுக்கு இது இயற்கைதானே?

அற்புதம் ஜயலக்ஷ்மி அவனை அஞ்ஞானி என்ற முறையில்தான் அறிந்திருந்தாள். அதுவும் அல்லாமல் அழகை மறைக்கும் தரித்திரமும், குடுமியும் அவனை அவள் அறிவதற்குப் பெருந் தடையாக இருந்தன. ஆனால் அவன் அறிவுத் திறமையை வியக்காமல் இருக்க முடியவில்லை. எப்படியாயினும் அஞ்ஞானி; அதுவும் குணப்படுத்த முடியாத அஞ்ஞானிதானே அவன்!

ஏறக்குறைய பரீட்சைக் காலமும் நெருங்கி விட்டதால் ஆசிரியர்களின் நம்பிக்கை யெல்லாம் இவர்களுடைய கீர்த்தியைக் கொண்டுவரும் வெற்றியைக் குறித்தவண்ணமாக இருந்தது.

அன்று ரசாயன அறையில் இருவரும் ஒரு ரசாயன சோதனை செய்துகொண் டிருக்கிறார்கள். இருவருக்கும் அடுத்தடுத்த மேஜை யானாலும், இருவரும் அந்த இரண்டு வருஷங்களில் இரண்டு முறை பேசியிருப்பார்களோ, என்னவோ? ஆனால், அவர்கள் பேசாதது, கூச்சத்தினால் அல்ல.

ரசாயன வகுப்பில் மாணவர்களின் சிறு குறும்பிற்குத் தகுந்த வசதிகள் இருக்கின்றன. ஒன்றுமில்லை: சாக்குக் கட்டியைப் பொடித்து மேஜையில் பதித்திருக்கும் இங்கிப் புட்டிகளில் போட்டு விட்டால், அது பொங்கிப் பக்கத்தில் இருக்கிறவர்கள் உடைகளை நாசமாக்கிவிடும். இதைவிடச் சிறிது அபாயகரமான, ஆனால் குஷியான வேடிக்கை, இரண்டு மூன்று அமிலங்களை ஒன்றாகக் கலந்து வைத்து

விடுகிறது ; அது சில சமயம் டபீர் என்று வெடித்து, உடைகளைச் சிதைத்து விடும். சில சமயம் தேகத்தில் பட்டுப் பொத்து விடுவதும் உண்டு.

அன்று இருவரும் ரசாயன சோதனையில் ஈடு பட்டிருக்கும் பொழுது - (இயற்கையான வகுப்புச் சமயம் அல்ல.) ஜயலக்ஷ்மியின் பக்கத்தில் ஒரு பாட்டில் டபீர் என்று வெடித்து, அவள் உடைகளை நாசமாக்கி விட்டது. ஜயா பயந்து போய்ச் சிறு கூக்குரலிட்டாள். அம்பி திடுக்கிட்டு நின்றான். அடுத்த கணம் ஜயாவிற்கு பயம் தெளிந்தது.

"மிஸ்டர் ராமசாமி! இந்தமாதிரிக் குறும்பு செய்யும் ஒரு கோழை என்று தங்களை நான் நினைக்கவில்லை" என்று ஆங்கிலத்தில் சொன்னாள்.

அம்பிக்குச் சுறுக்கென்று அவ்வார்த்தை உள்ளத்தே தைத்தது. அவனும் பெருமிதமாக, "ஒரு ஹிந்து கோழையல்ல" என்று சொல்லிவிட்டு வேறு புறம் திரும்பிக் கொண்டான்.

அவளுக்கு இது தன் மதத்தினரைக் கேலி செய்த மாதிரிப் பட்டது. உடனே ஆசிரியரின் உதவியை நாடி - கத்தோலிக்கராயினும் கிறிஸ்தவர்தானே - இவனுக்குப் புத்தி புகட்ட வேண்டும் என்று சரேலென்று வெளியே சென்றாள்.

நேராக ஞானதிக்கம் சாமியாரிடம் சென்று விஷயத்தைச் சொல்ல, தம் லட்சியத்திற்கு ஒரு வழி அகப்பட்டதென்று நினைத்தார் அவர். இதை வளர்ப்பது, (அவர் ஊடல் என்று நினைத்தார்) இவ்விருவரையும் தமது மதத்திற்கு அவளுடன் கொண்டு வரும் வழி என்று நினைத்து, அவளைப் பார்த்துச் சிரித்துவிட்டு, "உனக்கு ஹாஸ்ய உணர்ச்சி போதாது. நான் அவனைக் கண்டிக்

கிறேன். நீ, ஏன் அவனுடன் சண்டை பிடித்துக் கொள்ள வேண்டும்?'' என்று சொல்லி அனுப்பிவிட்டார். ஜயாவிற்கு இது திருப்தி அளிக்கவில்லை. அதுவும் அல்லாமல் அவருடைய நடத்தை ஆச்சரியமாக இருந்தது.

## 4

ஜயாவிற்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அம்பியை எப்படியாவது தண்டனை பெறச் செய்ய வேண்டும் என்று தோன்றியது. அவன் அதைச் செய்திருப்பானே, இல்லையோ என்ற பிரச்னையே இப்போது இல்லை. தன்னால், அவனை என்ன செய்ய முடியும்? இப்பொழுது அவன் அண்ணனிடம் சொன்னால்? — அப்படித்தான் செய்ய வேண்டும். அது தான் அவள் மனப்போக்கு.

அன்று சாயங்தரம் கலாசாலை விட்டாயிற்று. கிருஷ்ணமூர்த்தி நேராக 'லைப்ரரி'க்குச் சென்றான், வாசிப்பதற்குப் புஸ்தகம் ஏதாவது எடுத்துக்கொண்டு செல்ல.

அங்கே ஜயா அவனைச் சந்தித்தாள்.

''மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி, ஒரே ஒரு வார்த்தை'' என்றாள்.

எப்பொழுதும் பெண்களுடன் - அதாவது தாயைத் தவிர – வேறு யாருடனும் பேசிப் பழகாதவன், சற்றுத் திடுக்கிட்டுத் திரும்பினான்.

''என்ன!'' என்று தழுதழுத்த குரலில் கேட்டான்.

ஜயலக்ஷ்மிக்கு உள்ளூற நகைப்பு. 'இந்த அஞ்ஞானிகள் பெண்களுடன் பேசுவதென்றால் என்ன இவ்வளவு கோழையாக இருக்கிறார்கள்! ஒரு கிறிஸ்தவப்

பையன் இப்படி இருப்பானா? இவனைச் சிறிது கிண்டல் செய்யவேண்டும்' என்று நினைத்தாள்.

"உங்களுடன் தனியாகச் சற்றுப் பேசவேண்டும். வராந்தாவிற்கு வாருங்கள்" என்றாள்.

கிட்டுவிற்கு உடல் முழுவதும் வியர்த்தது. மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? பதில் பேசத் தைரியம் இல்லை. பின்னால் சென்றான்.

அவள் அன்று மத்தியான்னம் நடந்ததை, அம்பி செய்ததை, கூறினாள்.

கிட்டுவிற்குப் பிரமாதமான கோபம் வந்து விட்டது; "அவன் வரட்டும் கண்டிக்கிறேன்; நீங்களும் இருங்கள். உங்கள் முன்னிலையிலேயே" என்றான் கிட்டு.

கீழே 'காம்பவுண்டி'ல் அம்பி நிற்பதைக் கவனித்தான் கிட்டு. "அம்பி! உயரே வா?" என்று கூப்பிட்டான். அந்தக் குரலில் கோபமும் பெருமிதமும் கலந்திருந்தன.

"அவன் வரட்டும்; அவனுக்குப் புத்தி கற்பிக்கிறேன்."

அம்பி வந்தான். மத்தியான்ன சம்பவம் அவனுக்கு ஞாபகமே இல்லை. ஆனால் அவர்கள் இருவரும் நின்றிருப்பது ஆச்சரியமாக இருந்தது.

நெருங்கினான்.

"என்னடா அம்பி! இத்தனை நாள் உன்னை மனிதனாக நினைத்திருந்தேன். உனது 'கிளாஸ் மேட்'டினிடம், அதுவும் ஒரு பெண்ணினிடம் இந்த மாதிரிக் குறும்புத்தனமாக நடக்கலாமா?" என்று கோபித்தான் கிட்டு.

அம்பிக்குத் தூக்கி வாரிப் போட்டது. இத்தனை நாள் தன்னுடன் நெருங்கிப் பழகிய கிட்டுவே இப்படி நினைத்தால்...அவனுக்குக் கோபம் வந்தது.

"தாங்கள் எத்தனை நாளாக இந்தக் காலேஜில் பிரின்ஸிபால்" என்று கிட்டுவைக் கேட்டுவிட்டு, "தங்களுக்குப் பிரின்ஸிபால் யாரென்று தெரியா விட்டால் நான் அறிமுகம் செய்து வைக்கிறேன்" என்று ஜபாவைப் பார்த்தான் அம்பி.

இதற்கு முன் எதிர்க்காதவன் அடங்கியிருக்க வேண்டியவன், எதிர்த்தால் ஏன் கோபம் வராது? கிட்டு, பளீரென்று கன்னத்தில் அடித்தான். இதை எதிர்பார்க்காத அம்பி மலைத்துக் கல்லாகச் சமைந்தான். அடிகள் வெகு பலமாக, மூர்க்கமாக, ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்தன.

ஜபாவின் நிலைமை மிகக் கஷ்டமாகிவிட்டது; ஏன் சொன்னோம் என்றாகிவிட்டது. அவள் எதிர்பார்த்தது ஓர் அதட்டல், ஒரு மன்னிப்பு. ஆனால் இப்போது, அம்பியின்மீது இரக்கம்!

"மிஸ்டர் கிட்டு? நிறுத்துங்கள், இதென்ன? நிறுத்துங்கள்......"

அம்பிக்கு ஏற்பட்ட மலைப்பு நீங்கியது; "நீயா அண்ணன்?" என்று கூறிக்கொண்டே கிட்டுவின் மூக்கிலும் முகத்திலும் இரண்டு குத்து விட்டான்.

அந்தக் குத்தில் கிட்டுவிற்கு தலை சுற்றியது; அம்பியின் குத்து ஒன்று வயிற்றில் விழுந்தது. அவ்வளவு தான். ஆனால் அம்பி திரும்பிப் பார்க்காமல் நடையைக் கட்டிவிட்டான்.

"அட. மிருகமே!" என்று மறையும் உருவத்தைப் பார்த்து எறிந்து விழுந்துவிட்டு ஜபா கீழே விழ இருந்த

கிருஷ்ணசாமியைத் தாங்கினுள். வாலிபனை, வெறும் கனமான உடலை, தாங்கப் போதுமான சக்தி அவளுக்கு இல்லை. பாரம் அவளைக் கீழே இழுத்தது. ஆனால் லாவகமாகத் தாங்கியபடியே கீழே படுக்க வைத்தாள். கிட்டுவிற்கு மூச்சுப் பேச்சு இல்லை. ஜயா பயந்து நடுநடுங்கி விட்டாள். என்ன செய்வது என்று தெரியவில்லை. மடியில் தூக்கிக் கிடத்திய வண்ணம், "கிருஷ்ணசாமி! கிருஷ்ணசாமி!" என்று அவன் பெயரைக் கூப்பிட்ட வண்ணமாக இருந்தாள். கையிலிருந்த கைக் குட்டையால் அவன் முகத்தைத் துடைத்தாள். சற்று விசிறினுள்.

மெதுவாக, "அம்பி!" என்று கூப்பிட்டுக் கொண்டே அவன் கண்ணைத் திறந்தான்.

கிட்டு ஒரு பெண்ணின் மடியில் இருப்பதை உணர்ந்ததும் உண்டான கூச்சம், அவனைத் தடுமாறி எழுந்திருக்கச் செய்தது.

அவர்கள் கண்கள் சந்தித்தன. ஜயா சிரித்தாள்; ஆனால் அவள் கண்கள் கலங்கின.

"கிட்டு!" என்றுள். கிட்டுவின் மனம் அவன் வசம் இல்லை. அவளை நோக்கிக் கைகளை விரித்தான். ஜயாவின் மார்பு அவன் மார்பில் விழுந்தது. அவளுடைய கரங்கள் அவன் கழுத்தைச் சுற்றின.

அடுத்த கணம் நிலைமையை அறிந்து இருவரும் விலகினுர்கள். ஜயாவின் முகம் நாணத்தால் சிவந்தது.

"ஜயா!"

"கிட்டு!"

ஜயாவின் முகம் அவனுடைய மார்பில் மறைந்தது. அவளை வாரியெடுத்துத் தனக்குச் சொந்தமாக்கினுன். அவள் அவனைத் தன்னுள்ளத்தில் சிறை செய்தாள்.

"நாளைக்கு உன் அப்பாவிடம் கேட்போம்" என்று கிட்டு சொன்னதும் ஜயாவின் கனவு பாழானதுபோல், அவளுக்குப் பட்டது.

அவன் அஞ்ஞானி! அவள் கிறிஸ்தவப்பெண்.

## 5

அம்பியும் கிட்டுவும் சிறு குழந்தையாக இருக்கும் பொழுது எத்தனை தடவை 'டூ' விட்டுக்கொண்டார்கள் என்று அம்பிக்கு ஞாபகம் இல்லையானாலும், இந்த மாதிரி எதிர்பாராத விதமாய், எதிர்பாராத காரணத்திற்காகப் பெரும் சண்டையிட்டுக் கொள்ளுவோம் என்று அவன் நினைக்கவேயில்லை. அதிலும் தன்னுடைய அண்ணன் இப்படி இருப்பான் என்று சிறிதும் எதிர் பார்க்கவே யில்லை. ஆதலால், அம்பிக்கு அவனுடன் பேசவே மனமில்லை. இருவரும் ஒன்றாக வீட்டிற்குச் செல்லும் வழக்கம் நின்றது.

இது கிட்டுவிற்கு ஒரு விதத்தில் நன்மையாகவே இருந்தது. அவன் சென்ற பிறகு செல்வது என்ற காரணத்தை வைத்துக்கொண்டு ஜயாவை அடிக்கடி சந்திக்க வசதி ஏற்பட்டது அவனுக்கு.

ஜயாவிற்கு அந்த முதல் உணர்ச்சியில், தன்னை மறந்ததாக, வீட்டிற்குச் சென்றபிறகு நொந்து கொண்டா ளாயினும், கிட்டுவை அடிக்கடி சந்திக்கவே, படிப்படியாக அவன் ஓர் அஞ்ஞானி என்ற எண்ணமும் அவள் தனிமை யாய் இருக்கும்பொழுதும் தோன்றாமல் ஒழிந்தது.

கிட்டுவிற்கு 'இனிமேல்' என்ற நினைவு ஏற்படா திருந்ததில் ஆச்சரியம் இல்லை. உணர்ச்சி விஷயங்களில், இனிமேல் என்ற பிரச்னையைப் பெண்களே சீக்கிரத்தில் கவனிக்கக் கூடியவர்கள். தன்னை ஒப்புக் கொடுப்பது, தன்னுடைய வாழ்க்கையை ஓர் ஆண் மகனிடம் பணய

மாக வைப்பது எவ்வளவு சீக்கிரத்தில் நடக்கிறதோ, அவ்வளவு விரைவிலேயே வருங்காலத்தைப் பற்றித் திட்டம் போடும் திறனும் படைத்து விடுகிறார்கள் அப்பெண்கள்.

சம்பவம் நடந்து பத்துப் பதினைந்து நாட்கள் கழித்து ஒரு சாயந்தரம் இருவரும் சந்தித்தபோது, ஜயா பேச்சை அந்த விஷயத்தில் திருப்பினாள். "கிட்டு, நான் ஒன்று கேட்கப் போகிறேன். கோபித்துக் கொள்வாயோ?"

"என்னடி ஜயா, இப்படிக் கேட்கிறாய்?"

"உன்னிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டுமென்று......கோபித்துக் கொள்வாயோ என்றுதான் பயமாக இருக்கிறது!" என்று கிட்டுவின் மீது சாய்ந்து அவன் கழுத்தில் கரங்களைச் சுற்றி, அவன் கண்களை நோக்கினாள்.

"ஜயா, சொல்லுகிறதைச் சொல்லேன்......நான் என்ன முரடனா?"

"கோபப்பட மாட்டீர்களே?"

"கோபப்பட மாட்டேன் என்று எத்தனை தரம் சொல்லுகிறது?" என்று அவளை முத்தமிட்டான்.

"கிட்டு.......நாம் இப்படியே......பிறகு என்ன செய்வது?"

கிட்டு திடுக்கிட்டு விழித்தான். தான் ஒரு பெண்ணை அநியாயமாகச் சதி செய்து வாழ்க்கையைக் குலைத்து விட்டதாக நினைத்தான். வருங்காலம் என்பது அந்தகாரம்போல் அவன் அறிவை மறைத்தது.

"ஜயா, என்னுடன் வந்துவிடு. சமூகத்தில் இடம் இருக்காது......ஆனால்.......ஜயா, என்ன செய்வது? நீ சொல் நான் கேட்கிறேன்......" என்று காதில் கேட்ட லட்சியங்களை ஒப்பித்தான்.

"கிட்டு, கோபம் வருமா நான் சொன்னால்?...... நீ எங்கள் மதத்தைத் தழுவி விடு...அப்புறம் கஷ்டமில்லை. எனக்காக நீ செய்வாயோ?" என்று அவன் மார்பில் தலையைச் சாய்த்த வண்ணம் அவன் கண்களை நோக்கினாள்.

கிட்டு அவளை இறுக அணைத்துக்கொண்டு, "ஆ... ஆ.. க..ட்டும்" என்றான். அது லேசான வழிதான். ஆனாலும் அவன் மனம் எந்தத் திக்கில் தத்தளித்தது என்று அவனுக்குத் தெரியாது. ஒரு பெண்ணைக் காப்பாற்ற எதுவேண்டுமானாலும் செய்யலாம் என்று நினைத்தான்.

"அப்படியானால் அப்பாவிடம் வாயேன் அநுமதி கேட்கலாம்" என்று அழைத்தாள் ஜயா.

இருவரும் சகரியாஸ் நாடாரிடம் சென்றார்கள். அவர் முதலில் திடுக்கிட்டார். ஆனால், கடைசியாகத் தம் செல்வக் குழந்தைக்கு அநுமதி தர வேண்டியிருந்தது. அதில் பிறகு அவருக்கு இரட்டிப்புச் சந்தோஷம். ஒன்று தமக்கு ஒரு பிராம்மண மாப்பிள்ளை கிடைப்பது. இன்னொன்று தம்முடைய மகளின் கல்யாணத்தினால், அநியாயமாகச் சாத்தானின் நரக ராஜ்யத்திற்குப் போகாது, ஓர் ஆவியைக் கர்த்தரின் பரமண்டலத்திற்குச் சேர்க்க முடிந்தது என்பது. அன்று அவர் படுக்கைக்குப் போகுமுன் ஜபம் செய்யும்போது, பாவியான அஞ்ஞானியின் மனத்தைக் குணப்படுத்தக் கர்த்தராகிய இயேசுவிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டார்.

பரீட்சை முடிந்ததும், கிட்டுவிற்கு ஞான ஸ்நானத்துடன் திருமணத்தையும் நடத்தி விடுவது என்றும், அங்கிருந்த ரெவரண்ட் பீட்டர்ஸன் துரை உதவியால் புரோட்டஸ்டாண்ட் கல்லூரியில் ஓர் உபாத்தியாயர்

உத்தியோகத்தை வாங்கிக் கொடுப்பது என்றும் பேசி முடிந்தது.

கிட்டு, தன் வாழ்க்கைப் பிரச்னைகள் இவ்வளவு எளிதாக, இனிமையாக நடைபெறும் என்று எதிர்பார்க்கவில்லை; ஆகையால் இதில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. மேலும் எவ்வளவு நாஸூக்காக நாகரிகமாக இருக்கிறது என்பதில் மிகுந்த குதூகலம். இந்த இரகசியத்தை அவனுடன் பகிர்ந்து கொள்ள ஜயாவே போதும் என்று பட்டது. போகும் போதெல்லாம் காப்பி அருந்தப் பழக்கிக்கொண்டான். ஜயா சாமர்த்திய சாலியாகையாலும், கிட்டுவின் காதலுக்காகத் தன் உயிரையும் தியாகம் செய்யக்கூடியவளாகையாலும், மாமிச உணவுகளைப்பற்றி வாசனைகூடப் படாமல் ஜாக்கிரதையாக இருந்து வந்தாள்.

பரீட்சையும் வந்து சென்றது. அதுவரையில் தன்னுடைய இரகசியத்தைக் கிட்டு வெகு ஜாக்கிரதையுடன் காத்து வந்தான். அவனுக்குத் தன் வீட்டிற்குச் செல்லும்போதெல்லாம் அங்கு இருண்டு சிதைந்து கிடக்கும் தரித்திரக் கோலம், அவனது மனசில் தாயின் மீதும் ஒரு வெறுப்பைத் தோற்றுவித்தது.

ஒரு நாள் காலையில் அருவன்குளத்தை விட்டுச் சென்றவன் திரும்பி வரவில்லை. போகும் பொழுது, "அம்மா? கொஞ்சம் தீர்த்தம் தா?" என்று வாங்கிச் சாப்பிட்டுவிட்டுச் சென்றவன்தான்.

அன்று மத்தியான்னம், கிட்டு, கிறிஸ்தப்பர் கிருஷ்ணமூர்த்தியாகி, ரெவரண்ட் பீட்டர்ஸனின் முன்பு, ஜயாவுக்குத் தன் வாழ்விலும் தாழ்விலும் பங்கெடுத்துக் கொள்ளும் உரிமையைக் கொடுத்தான். திருமணம் மிகச்

சுருக்கமாக இரண்டு மூன்று சகரியாஸ் நாடாரின் நண்பர்களுடன் நடந்தபின் தம்பதிகள் திரும்பினர்.

அன்று பாளையங்கோட்டைச் சந்தைக்குச் சென்றிருந்த சாமண்ணு இந்தச் செய்தியைத் தலை தெறிக்க ஓடிவந்து அம்பிக்கும் அவன் தாய்க்கும் அறிவித்தார். மீனாக்ஷியம்மாளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சாமண்ணுவிற்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்ற சந்தேகம் தொடர்ந்து தோன்றிற்று. "அம்பி, எதுக்கும் நீ போய்ப் பார்த்து விட்டு வா!" என்று அனுப்பினாள். அவளால் அதை நம்ப முடியவில்லை. கிட்டு அப்படிச் செய்வான் என்று அவள் மனம் ஒப்புக்கொள்ள மாட்டேன் என்றது.

அம்பியை இந்தச் செய்தி திடுக்கிடச் செய்தது. ஆனாலும் அவனுக்கு இப்படி நடக்கக்கூடும் என்று முன்பே பட்டது. முன் சம்பவங்கள், அது நடக்கக் கூடியதுதான் என்றாலும் கிட்டு அவ்வளவு அசடன் என்று அம்பி எதிர்பார்க்கவில்லை.

நேரே தான் படிக்கும் கலாசாலைக்குச் சென்று ஞானப்பிரகாசம் சாமியாரின் அறைக்குள் நேராகச் சென்றான். சாமியாருக்குக் கிட்டுவின் மீது பரம கோபம். தம் வலைக்குத் தப்பிப் புரோட்டஸ்டாண்ட் மதத்தைத் தழுவியதில் அடங்காத சீற்றம். அவரால் அதை மன்னிக்கவே முடியவில்லை. கிட்டு இப்படிச் செய்ததைவிட ஹிந்து மதத்திலே ஓர் அஞ்ஞானியாகக் காலங்கழிக்க முரணி இருந்தாலும் அவருக்கு அவ்வளவு கோபம் இருந்திர. து.

வெண்ணெய் திரண்டு வரும்பொழுது பானை உடைந்தால் சீறறம்வருவது இயற்கைதானே? ஆனால், அதைவிடப் பன்மடங்கு சீற்றம், வெண்ணெயை

மற்றவன் அடித்துக்கொண்டு போகும் ஏமாற்றத்திலுல் ஏற்படும்பொழுது, அது மன்னிக்கப் படவேண்டிய விஷயம். மேலும் ஸ்ரீலஸ்ரீ ஞானப் பிரகாசசாமியாரும் மனிதன்தானே ?

கிட்டுவின் மீது உண்டான சீற்றத்தை யெல்லாம் வைத்து அம்பியைக் கண்டதும் அவன் மீது பாய்ந்தார். கிட்டு புரோட்டஸ்டாண்ட் ஆனது அம்பியின் தவறு என்று அவர் நினைப்பது போல இருந்தது.

கிட்டுவின் மேல் இருந்த வெறுப்பை யெல்லாம் அம்பியிடம் கொட்டி, உண்மையையும் கக்கி, கடைசியாக, "அந்தச் சைத்தானின் மதத்திலுடன் நீ ஒன்றும் வைத்துக் கொள்ளக் கூடாது" என்று புத்தி கற்பித்து அனுப்பி வைத்தார்.

அம்பிக்கு இருந்த சிறிது சந்தேகமும் போய்விட்டது. இனிக் கிட்டுவைப் பார்த்து என்ன பயன்? வீண் மனத் தாங்கலும் கசப்புந்தான் !

நேராகத் தாயிடம் வந்து நடந்ததைக் கூறினுன். "அப்படி இருக்காது; அப்படி இருக்காது" என்று மனப்பால் குடித்துக்கொண் டிருந்தவளுக்கு நெஞ்சில் சிவதனுசைக்கொண்டு அடித்தது போல் இருந்தது.

உடனே ஏகமாகப் பிரலாபித்துக் கொண்டு பாளையங்கோட்டைக்குப் புறப்பட்டாள். வழிநெடுக அழுகை, பிரலாபம், பொருமல்! கிட்டு இறந்த மாதிரி தான் !

சகரியாஸ் நாடாரின் வீட்டின் முன்பு பெரிய கூட்டம் கூடிவிட்டது.

"கிட்டு ! கிட்டு !" என்ற மீனுக்ஷியம்மாளின் பிரலாபம். தெய்வத்தையும் தனக்குத் தெரிந்த எல்லா வற்றையும் வைதுகொண்டு கிட்டுவை வரும்படி

மன்றுடினுள். வந்தால், ஹிந்து சமூகம் சேர்த்துக் கொள்ளுமா? அதுவும் அவளுக்குத் தெரியும்; பெற்ற மனம்.

கிட்டுவிற்கு இது பெரிய அவமானமாக இருந்தது. தன்னுடைய புதிய மாமனுரைப் போலீசுக்கு அனுப்பி விட்டு, வெளியே விறுவிறென்று வந்து, "வரமுடியாது! கூச்சல் போடாதே, போ" வென்று அதட்டி விட்டு உள்ளே சென்றுவிட்டான்.

இத்தனை நேரமும், அம்பி ஒரு வார்த்தையும் பேசாமல் பார்த்துக்கொண் டிருந்தவன், தன் தாய்க்குப் பெரும் அவமானம் வந்து விடக் கூடாது என்று, ஒரு ஜட்காவில் அவளைத் தூக்கிப் போட்டு வண்டியை வேக மாக விடச் சொன்னுன். அங்கே கூடியிருந்த கிறிஸ்தவ சகோதரர்கள், 'ஓ' வென்று கூவிக் கேலி செய்தார்கள்.

வண்டி நேராக அருவன் குளத்திற்குச் செல்ல முடியாது. ஆற்றிற்கு இக்கரையிலேயே வாடகையைக் கொடுத்து விட்டு இருவரும் சென்றுர்கள்.

மீனுக்ஷியின் பொருமல் அவள் துக்கத்திற்குப் போக்கு வீடாக இருந்தது. அம்பியின் சாந்தமான முகம், ஹிருதயத்தில் கொட்டும் இரண்டாயிரம் தேள்களின் விஷத்தைச் சகித்துக்கொண் டிருந்தது என்பதை யாரால் உணரமுடியும்?

அவர்கள் ஊருக்குள் வரும்போது நன்றுக இருட்டி விட்டது. இருவரும் தனித்துச் செல்வதை அக்கிரகாரத் தெருவில் வாசற்படியில் நின்று கொண்டு குசு குசு என்று பேசிய வண்ணம் பார்த்திருந்தனர் யாவரும்.

இருவரும் அந்த இடிந்த குச்சினுள் செல்லும் வரையில் ஒருவராவது ஏன் என்று பேசவில்லை. அம்பி

உள்ளே சென்று விளக்கை ஏற்றினான். மீனாக்ஷி ரேழியிலேயே படுத்து ஏங்கிக்கொண் டிருந்தாள்.

"ஆமாம், விளக்கு ஒன்றுதான் குறை!" என்ற முனகல்.

வெளியில் யாரோ, "அம்பி! அம்பி!" என்று கூப்பிடும் சப்தம்.

வெளியே வந்தான்.

அங்கே தீக்ஷிதர் நின்றுகொண் டிருந்தார். வயசு எண்பதிற்குமேல் இருக்கும். நல்லவர். அநுபவம் உள்ளவர்.

"அம்பி!" என்று கூப்பிட்டு விட்டுத் தயங்கினார்.

"என்ன?"

"அம்பி, நான் ஊருக்கு நல்லவன் டாப்பா. நீயும் நல்லவன். ஊரோடு ஒக்க ஓடு. மடப்பயல் கிட்டு செய்த தற்காக உங்களை விலக்கி வைத்திருக்கிறார்கள். ஊரார் என்ன செய்யலாம்? விதி! இங்கிருந்தால் பிரயோஜனம் இல்லை. விலகிண்டுட்டா ஒருவருக்கும் கஷ்டமில்லை...."

"அப்படியா!" என்றான் அம்பி. கிட்டுவின் மீது ஒரு பச்சாத்தாபம் தோன்றியது.

"அதற்கென்ன? சரிதான்" என்றான் மறுபடியும்.

ஆமாம் பழைய, ஓநாயும் ஆட்டுக் குட்டியும் கதை தான். அதற்கு என்ன?

## ௬

கிட்டு அந்த ஆவேசத்தில் உள்ளே சென்றவன் ஒருவருடனும் பேசாமல் தன் அறைக்குள் சென்று கதவை அடைத்துக் கொண்டான். அவன் மனசில் பேய்கள் சுதந்தர நடனம் புரிந்தன. மனம் குழம்பியது. இருள்!

ஒரு பக்கம் தாய்; மறுபுறம் ஜயா!

ஜயா, கிறிஸ்தவ மதத்தினளானாலும் ஒரு பெண். தன்னுடைய கணவனின் கஷ்டத்தை அறிந்துகொண்டாள். தனது பணிவிடைதான் அவனுக்குச் சாந்தி தரும் என்று தெரிந்து கொண்டாள்.

மெதுவாகப் பின்புறம் வந்து நின்றாள்.

கிட்டுவின் கழுத்தில் அவள் கரங்கள் சுருண்டன.

"கிட்டு!"

அவள் கண்களிலிருந்து முத்துக்கள் உதிர்ந்தன போல் அவன் நெற்றியை இரண்டு துளிகள் நனைத்தன.

"ஜயா!" - ஒரு பெருமூச்சுத்தான் வந்தது.

அவனுடைய தலையைத் தன் மார்பில் ஆதரவுடன் அணைத்தாள்.

அன்று, நெடுநேரம் அந்த அறை மௌனமாக இருந்தது.

சாந்தி பிறக்கவில்லை!

ஜயாவிற்குப் பயத்தில் பிறந்த ஒரு யோசனை தோன்றியது. அவனுக்கும் மாமிச உணவு பழக்கி விட்டால் இனித் தாயை நோக்கிக் கிட்டுவின் மனம் செல்லாது என்று நினைத்தாள்.

உடனே கீழே சென்று கறிவடையை ஒரு தட்டில் எடுத்து வந்து அவன் முன்பு வைத்தாள். இதுவரையில் அவன் மனம் கோணாது இருக்கச் சபதம் செய்தவள் அன்று அவன் பக்கலில் உட்கார்ந்து ஒன்றை எடுத்து அவன் வாயில் ஊட்டினாள்.

கிட்டு ஏதோ யந்திரம் மாதிரிக் கடித்தான். வடை மாதிரித் தெரியவில்லை. நடுவில் ஏதோ கடிபடாமல் ஜவ்வுப் போல் தட்டுப்பட்டது.

"இது என்ன ஜயா?" என்றான்.

ஒரு புன்சிரிப்புடன் தன்னுடைய வாயில் ஆள்காட்டி விரலை வைத்துக்கொண்டு இரகசியமாக அவள், "கறி வடை?" என்றாள்.

"ஐயா! உன் காதல் எனக்குப் போதாதா! நான் ரப்பரையுமா தின்னவேண்டும்?" என்று பரிதாபகரமாகச் சிரித்தான்.

சட்டென்று அவன் முகம் மாறியது. வடைகளை அப்படியே சிதறிவிட்டு, "போ! போ!" என்று இரைந்தான்.

ஐயாவிற்கு நெஞ்சில் வாள்கொண்டு குத்திய மாதிரி இருந்தது. அவனுடைய நிலையைக்கண்டு வெளியே சென்றுவிட்டாள்.

அவள் அன்று இரவு தலைவிரி கோலமாக தலை வாயிற்படியில் படுத்துக் கிடந்தது, அவனுக்கும் தெரியாது; வீட்டில் உள்ளவர்களுக்கும் தெரியாது. அன்றிருந்து அவளும் மாமிச உணவு தொடுவதில்லை.

## 7

அம்பியும், மீனாக்ஷியம்மாளும் உயிர் வாழ வேண்டி ஆசைப்பட்டால் கிராமத்தை விட்டு விலக வேண்டியது தான். அவர்கள் அதை விட்டுப் புறப்படுவதற்கு ஒரு வாரத்திற்குமுன் நரகம் எப்படி இருக்கும் என்பதைச் சிறிது அறிந்தார்கள்.

அம்பி, கைலாசபுரத்தில் இரண்டு ரூபாய்க்குள் ஒரு குடிசை வாடகைக்கு எடுத்தான். அங்கிருந்து வரும் பொழுது வீட்டையும் அநாவசியச் சாமான்களையும் விற்று விட்டதனால் சிறிதே கையில் பணம் இருந்தது.

வேளாளத் தெருவில் இருந்துகொண்டு, மீனாக்ஷி யம்மாள், முறுக்கு, அப்பளம் விற்றுக் காலட்சேபம்

செய்ய முயலுவதென்றும் அகற்குள், அம்பி ஒரு வேலை தேடிக் கொள்வதென்றும் ஏற்பாடு.

வேலை என்ன மரத்தில் காய்த்துத் தொங்குகிறதா? ஏக்கத்தினால் நாளுக்கு நாள் மெலிந்து வந்த மீனாக்ஷி யம்மாளுக்கு முன்போல் ஒன்றும் செய்ய முடியவில்லை.

இதற்குள் நாலைந்து மாசங்கள் சென்றன; கையில் இருந்த பணமும் செலவாகி விட்டன. அம்பியும் தேடாத இடத்தில் எல்லாம் தேடுகிறான். வேலைக்கு என்ன செய்வது?

அன்று மத்தியான்னம் வெயிலில் அலைந்து விட்டுச் சோர்ந்து வீட்டிற்குள் வந்தான். அன்று காலையிலிருந்து பட்டினி. மீனாக்ஷி அப்போது படுத்த படுக்கையாகக் கிடந்தாள். மருந்திற்கு என்ன செய்வது? அது இப்போது எங்கிருந்து கிடைக்கும்?

தபாற்காரன், "ஸார்! ராமசாமி. மணியார்டர் ஸார்?" என்றான்.

அம்பிக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுக்கு யார் மணியார்டர் அனுப்பப் போகிறார்கள்? ஒரு வேளை, தவறான விலாசமாக இருக்கலாம்.

அப்படி ஒன்றும் இல்லை. கிட்டுவிடமிருந்து வந்திருக்கிறது. அவனுக்கு அடங்காத கோபம்! எதனாலோ?

தபாற்காரனை அதைத் திருப்பி அனுப்புமாறு சொல்லிவிட்டு உள்ளே சென்று ஒரு கார்டில் பின்வருமாறு எழுதினான்:

"ஸ்ரீ கிறிஸ்தப்பர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு. தங்கள் மணியார்டர் எங்களுக்கு அநாவசியம். இரத்தத்தையும் வாழ்நாட்களையும் தியாகம் செய்தவருக்குப் பதில் உபகாரமாக, அவள் சுகமாக ஒரு கணமாவது இருக்கவேண்டும் என்ற நினைப்பே இல்லாமல்,

பொறுப்பை உதறித் தள்ளின ஒருவருடைய போலி அன்பு, அல்லது பச்சாதாபம் அவளுக்கு வேண்டாம். இனியாவது தயவுசெய்து எங்களைப் புண்படுத்தாதிருந்தால் போதும். மடிந்தாலும், ஹிந்து தர்மத்திற்காக மடிவோம்! இனியாவது அந்த அன்பு மட்டிலும் இருந்தால் போதும்.

இப்படிக்கு,
ராமசாமி.”

இந்தக் கார்டு கிட்டுவின் ஹிருதயத்தைப் பிளந்தது. இருளில் முட்டிக்கொள்ளும் போது நட்சத்திரம் கிடைத்தாலும் புழுதியில் தானே புரள வேண்டும்?

ஐயாவைப்போல் ஒரு சகதர்மிணி அகப்படாள் என்பதும் உண்மையே! வாழ்க்கையின் லக்ஷ்யம் அதனோடு முடிவடைந்து விடுகிறதா? கிறிஸ்தவமதம், ‘நான் சொல்வதை நம்பு; நீயாக ஆலோசிக்க உனக்கு அநுமதி இல்லை’ என்கிறது. ஹிந்து மதம், ‘நீ என்ன வேண்டுமானாலும் எண்ணு; ஆனால் சமூகக் கட்டுப்பாடு என்ற வேலியைத் தாண்டாதே!’ என்கிறது. இவற்றில் எது பெரியது?

எப்படியாவது தாயைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை! ஆனால் அம்பியின் கோபத்திற்குப் பயம். ஐயா! அவள் அவன்தான்! இவன் நினைத்ததெல்லாம் அவளுக்குச் சரி.

* * * *

நாட்கள் கழிந்தன.

அம்பிக்குப் பெட்ரோல் கம்பெனியில் 15 ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலை.

மீனாக்ஷியம்மாளுக்குப் படுக்கை நிரந்தரம்; கிட்டுவின் நினைவு நிரந்தரம்.

அன்று சாயந்தரம் மீனாக்ஷியம்மாளின் நினைவு தடுமாறியது.

ஏதோ, தற்செயலாகக் கிட்டுவும் துணிந்து தன் மனைவியுடன் வந்தான்.

உள்ளே ஜயாவை அழைத்துச் செல்வதற்குப் பயம். அதற்குள் ஜயா முந்திக் கொண்டாள். "நான் வெளியில் நிற்கிறேன்; பார்த்துவிட்டு வாருங்கள்" என்றாள்.

கிட்டு உள்ளே சென்றதும் திடுக்கிட்டான். தாயின் சாயைதான் படுக்கையில் கிடந்தது.

அம்பி ஒன்றும் பேசவில்லை.

சற்று நேரம் பொறுத்து, "இதுதான் உன் வேலை, பார்த்தாயா?" என்றான்.

கிட்டுவிற்குக் கோபம் வந்தது.

"நான் எனது லக்ஷியத்தை அடைந்தேன். அதற்கு யார் தடை?" என்றான்.

"ஒரு பெண்ணுக்காக அசட்டுத்தனமான மதந்தான் உனது லக்ஷியமோ? தனது தர்மத்தைப் பற்றிக் கேட்டாவது இருக்க வேண்டும். லக்ஷியம் என்ன குட்டிச்சுவர்?" என்றான் அம்பி.

இருவருக்கும் வாக்கு வாதம் வலுத்து விட்டது.

மீனாக்ஷியம்மாள் விழித்தாள்.

"தெய்வமே! நீ இருக்கிறாயா? என் இரத்தம், என் குழந்தைகள்! இவைகள் இரண்டிற்கும் இப்படிச் சண்டையை உண்டுபண்ணி விட்டதே, தர்மமா? அது நிஜந்தானா! இதற்கு மேல் எல்லாம் ஒன்று உண்டா? ஏ தெய்வமே, நீ நிஜந்தானா!" என்று பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்து பேசினாள். முகத்தில் தேஜஸ் இருந்தது; புதிய சக்தி இருந்தது. சொன்னவுடன் களைப்படைந்து சாய்ந்தாள்.

வெளியே எங்கோ ஒரு மாடு கன்றை நோக்கி,

"அம்மா !" என்று கதறியது. மீனாக்ஷியம்மாள் ஆவியும் எந்தத் தாயை மேயா நோக்கி விடுதலை பெற்றது.

"போ ! வெளியே !" என்றான் அம்பி.

"என் தாய் !" என்றான் கிட்டு.

அப்போது ஜயா உள்ளே தைரியமாக நுழைந்தாள்.

"இந்த இடத்திலா சண்டை ? நீங்கள் ஆண் பிள்ளைகளா ?" என்றாள்.

ஓடிச்சென்று மீனாக்ஷியம்மாளை மடிமீது எடுத்துக் கிடத்திக்கொண்டு கதறினாள்.

கிட்டுவைக் கொடுத்த புனிதமான சரீரம் அல்லவா ?

அம்பிக்கு என்ன ? அவன் தைரியசாலி ; அறிவின் தராசு.

இவள் செய்கை, இருவர் மனசிலும் ஒரு சாந்தியைத் தந்தது.

அவள் பெண். உணர்ச்சி வசப்பட்டவள். மதம் அவளுக்குத் தெரியாது. அம்பிக்கு அவள் செய்கை அவன் முன் அவளைப் பெரிய புனிதவதியாக்கியது.

மெதுவாகச் சரீரத்தைக் கிடத்திவிட்டு, கிட்டுவின் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு, "போய் வருகிறோம்" என்றாள்.

"நீ ஒரு ஹிந்துப்பெண்" என்றான் அம்பி.

"நான் கிட்டுவின் மனைவி" என்றாள் ஜயா.

"கிட்டு........" என்று என்னவோ சொல்ல வாயெடுத்தான் அம்பி. அதற்குள் இருவரும் சென்று விட்டார்கள்.

அம்பி அந்த அறையில் இருந்து, அந்தப் புனிதவதியான தாயின் சரீரத்திற்குச் சாந்தியைக் கொடுக்க மனித உலகால் முடியாது போனதைப்பற்றிக் குமுறினான்.

அதற்கென்ன செய்யலாம் ? அதுதான் வாழ்க்கை !



# வெளிப் பூச்சு

ரங்கநாதத்திற்கு அன்று சம்பளம் போடவில்லை நாளும் ஏறக்குறைய மாசக் கடைசியாகி விட்டது. வீட்டில் எண்ணூற்று ஐம்பது செலவு. வீட்டு வாடகைக் காரன், என்னவெல்லாம் பேசமுடியுமோ அதெல்லாம் சொல்லிவிட்டுப் போய்விட்டான். வீட்டுச் சாமான்களைத் தூக்கி எறிய அவற்றின்மீது கைதான் வைக்கவில்லை. இன்று இரவு வேளைக்கு வீட்டில் அரிசி இல்லை. சாப்பாடு லங்கணம் என்றாலும் பாதகமில்லை. இந்தச் சிறிய கவலைகள் உயிரை வாட்டி விடுகின்றன.

ஆபீஸிற்கு வந்து விடுவது என்றால், அது வீட்டுத் தொந்தரவுகளை எல்லாம் ஒரு பெண்ணின் தலையில் போட்டுவிட்டு, அங்கு வந்து ஒளிந்து கொள்ளும் கோழைத்தனம் என்று பட்டது.

வீட்டிற்குப் போவதற்குக்கூட மனமில்லை. கையில் பணக்கஷ்டம் ஏற்பட்டுவிட்டால், சந்நியாச உலகம் மோட்ச சாம்ராஜ்யமாகத் தோன்றும் ரங்காநாதத்திற்கு, மோட்ச சாம்ராஜ்யம் அல்லாவிட்டாலும், குடும்ப வாழ்க்கையை விட எவ்வளவோ மேலானதாகப் பட்டது.

அன்று அவன் வீட்டிற்குள் வந்தபோது அவனுடைய மனைவி, தன் கணவர் சம்பளம் வாங்கி வந்திருப்பார் என்ற நம்பிக்கையுடன் அவனை எதிர்பார்த்தாள். அவள் கண் களைச் சந்திக்கக்கூட அவனுக்குத் தைரியமில்லை.

கோட்டு ஸ்டாண்டில் சட்டையைக் கழற்றி மாட்டிக் கொண்டே, "இன்று சம்பளம் போடவில்லை. ஒருவரிடம் எட்டு அணா கடன் வாங்கி வந்திருக்கிறேன்" என்றான்.

"எட்டணுவா?" என்முன்.

ரங்கநாதத்திற்குக் காரணம் இல்லாது சிரிப்பு வந்துவிட்டது. விழுந்து விழுந்து சிரித்தான். எட்டு அணுவை வைத்துக்கொண்டு பொக்கிஷ மந்திரியாக முடியுமா?

அவளுக்கும் சிரிப்பு வந்து விட்டது. அவளும் விழுந்து விழுந்து சிரித்தாள்.

"மிஸ்டர் ரங்கநாத்" என்று வெளியிலிருந்து ஒரு குரல்.

"ஓஹோ! ராகவன் வந்திருக்கிறாப்போல் இருக்கிறது. வாங்கோ ஸார்?" - அவளைப் பார்த்து, "வீட்டில் பால் இருக்கிறதா?"

"ஆமாம் காலம்பற வாங்கினது இருக்கிறது"

"அப்போ காப்பியாவது போடு" என்முர்.

ராகவனும் வீட்டிற்குள் வர, அவரை வரவேற்று நாற்காலியில் உட்காரவைத்துப் பேசிக்கொண்டு இருந்தார்.

"வெற்றிலை போடுங்கள் ஸார்" என்று ரங்கநாதம் வெற்றிலைச் செல்லத்தை அவர் பக்கம் வைத்துவிட்டுத் தாமும் போட ஆரம்பித்தார்.

"ஏன் ஸார், இவ்வளவு நேரம் ஆபீஸிலிருந்து வர?" என்முர் ராகவன்.

"கொஞ்சம் வேலை இருந்தது; நீங்கள் அப்போதே வந்தீர்களோ?"

"இல்லை, நான் அந்த மூலையில் திரும்பும்பொழுது நீங்கள் வீட்டிற்குப் போவதைப் பார்த்தேன். என்ன ஸார்? நேற்றுச் சினிமாவிற்குப் போனீர்களா? ரொம்ப நல்லா இருந்ததாமே?"

"என்ன கதை?"

"ஸ்டீவன்ஸன் நாவலை, பிலிம் பண்ணியிருக்கிறான். ஆக்ட் நன்றாக இருந்தது."

"அப்படியா? நானும் போகவேண்டும். நாளைக்கும் இருக்குமோ?"

"அது எனக்குத் தெரியாது."

இப்படி இவர்கள் சினிமாவைப் பற்றியும் அதில் நடிக்கிறவர்களைப் பற்றியும் விவாதித்துக்கொண்டிருந்தார்கள்.

அதற்குள் காப்பியும் தயாராகியது. ரங்கநாதத்தின் மனைவி கதவண்டையில் வந்து நின்றாள்.

"என்ன ஸார், காப்பி கொஞ்சம் சாப்பிடுங்களேன்" என்றார் ரங்கநாதம்.

"இல்லை ஸார், இப்பொழுதுதான் சாப்பிட்டேன்; நீங்கள் சாப்பிடுங்கள்" என்றார் ராகவன்.

"கொஞ்சம் சாப்பிட்டால் என்ன வந்துவிடுகிறது? ராதா, காப்பியை இங்கேதான் கொண்டு வாடி" என்றார் ரங்கநாதம்.

காப்பியும் பரிமாறப்பட்டது. இருவரும் சாப்பிட்டுவிட்டு எழுந்தார்கள். மறுபடியும் வெற்றிலைச் செல்லத்தை எடுத்து வெற்றிலை போடச் சொன்னார் ரங்கநாதம்.

ராகவன் வெற்றிலை போட்டுக் கொண்டே, "எனக்கு நேரமாகிறது. உங்களிடம் எட்டணா இருந்தால் கொடுங்கள். அவசரம்; நாளைக் காலையில் தருகிறேன்" என்றார்.

"என்ன அவ்வளவு அவசரம்?"

"இல்லை; வீட்டிற்குப் போகவேண்டும்" என்றார்.

ரங்கநாதத்திற்குக் கொடுக்க மனமில்லைதான். கேட்காத மனிதன் கேட்கும்போது? - எட்டணாவை வாங்கிக்கொண்டு ராகவன் வெளியேறினார்.

ரங்கநாதத்தின் மனைவி உள்ளேவந்து, "சிறிதே அரிசியும் மண்ணெண்ணெயும் வாங்குங்கள்" என்றாள்.

"தோசை இருக்கிறதோ இல்லையோ? இன்றைக்கு அது போதும்" என்றார்.

"மண்ணெண்ணெய்!"

"ராகவன் எட்டு அணாக் கேட்டார்; கொடுத்திருக்கிறேன். நாளைக் காலையில் வாங்கிக் கொள்ளலாம்" என்றார் ரங்கநாதம்.



## மகாமசானம்

சாயந்தரமாகிவிட்டால், நாகரிகம் என்பது இடித்துக்கொண்டும் இடிபட்டுக்கொண்டும் போக வேண்டிய ரஸ்தா என்பதைக் காட்டும்படியாகப் பட்டணம் மாறிவிடுகிறது. அதிலும் தேகத்தின் நரம்புமுடிச்சுப் போல, நாலைந்து பெரிய ரஸ்தாக்களும், டிராம் போகும் ரஸ்தாக்களும் சந்திக்கும் இடமாகிவிட்டாலோ தொந்தரவு சகிக்கவே முடியாது. ஆபிஸிலிருந்து 'எச்சு'ப் போய் வருகிறவர்கள், இருட்டின் கோலாகலத்தை அநுபவிக்க வரும் அலங்கார உடை தரித்தவர்கள், மோட்டாரில் செல்லுவதற்கு இயலாத அவ்வளவு செயலற்ற அலங்கார வேஷ வௌவால்கள் எல்லாம் ஏகமேனியாக, 'எல்லாம் ஒன்றே' என்று காட்டும் தன்மை பெற்றவர்கள்போல் இடித்துத் தள்ளிக்கொண்டு அவரவர் பாதையில் போவார்கள். அன்றும் அம்மாதிரியே போய்க்கொண்டிருந்தார்கள்.

'ஒற்றைவழிப் போக்கு வரத்து' என்ற ஸஞ்சார நியதி வந்ததிலிருந்து, உயர்ந்த அடுக்குக் கட்டிடங்களின் உச்சியின்மேல் நின்றுகொண்டு பார்த்தால் அங்கே நாகரிகத்தின் சுழிப்புத் தெரியும். கரையைப் பீறிட்டுக்கொண்டு பாயும் வெள்ளத்தை அணைக்கட்டின்மேல் இருந்துகொண்டு பார்த்தால் எப்படியோ, அப்படி இருக்கும்.

நான் சொல்லவந்த இடமும் அதுதான். மவுண்ட் ரோட் ரவுண்டாணு. மலைப்பழ மாம்பழக் கூடைக்காரிகளின் வரிசை. அவர்களுக்குப் பின்புறம் எச்சில் மாங்கொட்டையைக் குதப்பித் துப்பிவிட்டு, சேலையில் கையைத் துடைத்துக் கொள்ளும் 'மெராஸ் பறச்சிங்கோ', கைத்தடியோடு 'சிலுமன்' கொடுத்து உலாவிக்கொண்டிருக்கும் காபூலிவாலா, முகம்மதியப் பிச்சைக்காரன், நொண்டிப் பிச்சைக்காரன், குஷ்டரோகப் பிச்சைக்காரன், ராத்திரித் 'தொழிலுக்கு'த் தயாராகும் யுவதி - பாதையின் ஓரத்தில் உட்கார்ந்துகொண்டு, நிம்மதியாகச் சீவிச் சிங்காரித்துக்கொண்டிருக்கிறாள் அவள் - அப்புறம் நாறுவித, "என்ன சார் ரொம்ப நாளாச்சே", "பஸ் வந்துட்டுது", "ஏறு" என்கிற பேர்வழிகள் எல்லாம். அவசரம், அவசரம், அவசரம்...

அப்பொழுது அவன் ரஸ்தாவின் ஓரத்தில் உள்ள நடை பாதையில் படுத்துச் சாவகாசமாகச் செத்துக்கொண்டிருந்தான்.

சாவதற்கு நல்ல இடம். சுகமான மர நிழல். வெக்கை தணிந்து அஸ்தமனமாகி வரும் சூரியன். "ஜே ஜே" என்ற ஜன இயக்கம். ராஜ கோலாகலம் என்றுதான் சொல்ல வேண்டும்.

அப்பொழுது அவன் செத்துக்கொண்டிருந்தான்; சாவகாசமாகச் செத்துக்கொண்டிருந்தான்.

ஜனங்கள் அவ்வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள்; வந்துகொண் டிருந்தார்கள். அவர்களுக்குத் தெரியாது; சிலர் தெரிந்து கொள்ள விரும்பவில்லை.

அவன் கிழட்டுத் துருக்கப் பிச்சைக்காரன். தாடி மிகவும் நரைத்து விட்டது. மேலே அழுக்குப் பிடித்த கந்தை; கையையும் காலையும், மூப்பு போஷணையின்மை இரண்டும் சேர்ந்து சூம்பவைத்து விட்டன. கால், காய்த்துப் போன கால்.

அவன் பக்கத்தில் தலைமாட்டில் இன்னும் ஒரு பிச்சைக்காரன் உட்கார்ந்துகொண் டிருந்தான். தகரக் குவளையில் தண்ணீரை எடுத்துக் கிழவனுடைய தலையைத் தூக்கி ஒரு மிடறு தண்ணீர் கொடுக்க முயன்றும் முடியாமையால் வாயை மட்டிலும் நனைத்தான். தன்னுடைய கைகளைத் தலைக்குக் கீழ்க் கொடுத்துத் தூக்க முயன்றான். படுத்துக் கிடந்த கிழவன், அதாவது செத்துக்கொண் டிருந்த கிழவன், தன் பக்கத்தில் காருண்ய ஸ்தல ஸ்தாபனத்தார் நிறுத்தி வைத்திருந்தார்களே, அந்தத் தகரப் பீப்பாய், அதை, பிடித்த படியே தலையை நிமிர்த்த முயன்றான். அவன் கண்களில் ஒளி மங்கி விட்டது. அவன் உதடு நீலம் பூத்து விட்டது. அவன் கதையெல்லாம் இன்னும் சிறிது நேரத்திற்குள் சம்பூர்ண மாகிவிடும். ஆனாலும் அவன் அந்தத் தகரப் பீப்பாயைப் பிடித்த பிடிப்பை விடவில்லை. பிடிப்பில் ஓர் ஆறுதல் இருந்தது; பலம் இருந்தது. பக்கத்தில் யாரோ தண்ணீர் கொடுக்கிறார்கள் என்ற பிரக்ஞை இருந்ததாக மட்டும் தெரியவில்லை. தண்ணீர் வந்தது; குடிக்க வேண்டும்: அவ்வளவுதான் அவன் மனசில். அதற்குமேல் நினைக்க விருப்பமில்லை; தேவையில்லை; திராணி இல்லை.

அப்போது டிராம் வண்டி ஏறுவதற்காக இரண்டு பேர் வந்தார்கள். இரண்டு பேரும் நின்றார்கள். ஆனால் டிராம் வரவில்லை. இருவரில் ஒருவர் தகப்பனார்; முப்பது வயசு. இரண்டாவது நபர், சிறு பெண் குழந்தை. நாலைந்து வயசு இருக்கும். அவரைப் பார்த்தால் தம் குடும்பத் தேவைகளைத் திருப்தி செய்து கொள்வதற்குக் கஷ்டப்படுபவராகத் தெரியவில்லை. குழந்தை சாதாரணக் குழந்தை; ஆனால், தாய் சிறிதே கவன முள்ளவள் என்பது தெரியும்படி, சுத்தமாக, படாடோபம் இல்லாமல் அலங்கரித்து விடப்பட்டிருந்தது.

குழந்தையும் தகப்பனாரும் டிராமுக்குக் காத்துக் கொண்டு நின்றார்கள். குழந்தை அவருடைய ஆள்காட்டி விரலைப் பிடித்துக்கொண்டு நின்றது. நின்றுகொண் டிருந்தவர்களுக்கு எதிர்ச் சாரியிலுள்ள கூடைக்காரி வைத்திருந்த மாம்பழம் நல்லதாகத் தெரிந்தது.

"குஞ்சு, நீ இங்கேயே நிக்கணும். அப்பா அந்தப் பக்கமாப் போய் ஒனக்கு மாம்பழம் வாங்கிண்டு வரு வாளாம்" என்றார் அவர்.

"ஆகட்டும்" என்றது குழந்தை.

"நீ ரோட்டிலே இறங்கி வரவே படாது, தெரியுமா? வந்தாப் பழமில்லை" என்றார் அவர். 'குழந்தையைத் தனியே விடக்கூடாது' என்று அவர் மனசு குறு குறுத்தது.

"இங்கியே நிக்கறேன் அப்பா" என்று கையடித்துக் கொடுப்பது போல அவரை அந்தப் பக்கம் போகும்படித் தாண்டியது குழந்தை.

மாம்பழ வேட்கையில் அவர் குழந்தையைத் தனியாக விட்டுவிட்டு ரஸ்தாவைக் குறுக்காகத் தாண்டி எதிர்ப் புறமாகச் சென்றார்.

குழந்தை தைரியமானது, இதற்குமுன் இவ்வாறு நின்று பழகியது என்றுதான் சொல்லவேண்டும். முதல் பயத்தில் அப்பாவைத் தொடர்ந்த கண்கள் அப்புறம் பராக்குப் பார்ப்பதில் ஒன்றிவிட்டன.

சிவப்பு மோட்டார் ஒன்று அதன் கண்களைக் கவர, அந்தப் பக்கமாகவே பார்த்துக்கொண்டு நின்றது. அவசரப் பட்ட ஜீவன் ஒன்று, குழந்தையைக் கவனிக்காமல் நடந்து போகையில் இடித்துவிட, - அதன் மனம் எந்த உலகில் ஓடுகிறதோ - குழந்தை தள்ளாடியது. இடிபடாமல் நிற்பதற்காகச் சிவப்பு மோட்டார் பார்க்கும் ஆசையையும் துறந்து நடைபாதை ஓரத்தில் உள்ள சுவர் அருகில்போய் நின்று கொண்டது. சுவரில் ஒன்றி நின்று சாய்ந்து கொண்டு தன்னுடைய பைக்குள் கைபோட்டபடி, நாலு திசைகளிலும் சுற்றிப் பார்த்தது.

செத்துக்கொண் டிருக்கும் அக்கிழவனும் அவ னுடைய சாவுக்கு உதவி செய்துகொண் டிருக்கும் வேறு ஒருவனும் அதன் கண்ணில்பட, 'அதென்ன வேடிக்கை?' என்று பார்க்கத் தயங்கித் தயங்கி அவர்கள் பக்கம் நெருங்கியது.

"பால் குடிக்கமாட்டேன்" என்ருல் அம்மா தன்னை மட்டும் வற்புறுத்தி டம்ளரில் வைத்துக்கொண்டு தன் னிடம் மல்லுக்கட்டி அதைப் புகட்டுவதும், அப்பா, 'வேண்டாம்' என்ருல் பேசாதிருந்து விடுவதும் அதற்குத் தெரியும். பெரியவர்களுக்கு 'வேண்டாம்' என்று சொல்ல உரிமையுண்டு; அம்மாவானுலும் அவருக்குப் பயப் படுவாள் என்பது அந்தக் குழந்தையின் சித்தாந்தம். அதற்கு அது வேடிக்கையாக இருந்தது. பெரியவர் களுக்கு டம்ளரில் புகட்டுவதா என்று அதற்கு ஆச்சரியம்.

இந்த வேடிக்கையைப் பார்க்க அந்த இரண்டு அநாதைகளின் அருகில் சென்றது குழந்தை. கிழவனுடைய தலைப் பக்கம் நின்றது.

இளைய பிச்சைக்காரன் மறுமுறையும் கிழவன் தொண்டையை நனைக்க முயன்றுகொண்டிருந்தான். அவனுக்குக் கைப்பழக்கம் போதாது. அவன் ஊற்ற முயன்றபோது, ஒன்று அதிகமாகக் குபுக்கென்று விழுந்து கழுத்தை நனைத்தது; அல்லது டம்ளரிலிருந்து விழவே யில்லை.

கிழவன் தகரப் பீப்பாயைப் பிடித்துக்கொண்டு செத்துக்கொண்டிருந்தான்.

குழந்தை நீரைப் பருகுவதற்கு வாயைக் குவிய வைப்பதுபோல வைத்துக்கொண்டு, "மெதுவா, மெதுவா" என்றது.

தண்ணீர் வார்த்தவன் ஏறிட்டுப் பார்த்தான். "அம்மா, நீ இங்கே நிக்கப்படாது; அப்படிப் போயிரம்மா" என்றான்.

"ஏன் ?" என்றது குழந்தை.

"இவுரு சாவுறாரு" என்றான் பிச்சைக்காரன்.

"அப்படீன்னா ?"

"சாவுறாரு அம்மா, செத்துப்போறாரு" என்று தலையைக் கொளக்கென்று போட்டுக் காண்பித்தான்.

அது குழந்தைக்கு நல்ல வேடிக்கையாகத் தோற்றியது.

"இன்னும் ஒருதரம் அப்படிக் காட்டு" என்றது.

'கூட்டம் கூடிவிடக் கூடாது' என்ற பயத்தில் பிச்சைக்காரன் வாயைப் பொத்திக்கொண்டு கையை மட்டும் காண்பித்தான்.

கிழவனுடைய தலைமாட்டில் அவனுடைய அந்திமக் கிரியைக்காக என்பதைக் குறிக்க இரண்டு தம்படிகள் போடப்பட் டிருந்தன. அவை குழந்தையின் கண்களில் பட்டன.

"பட்டாணி வாங்கிக் குடேன்" என்று படுத்துக் கிடந்தவரைச் சுட்டிக் காட்டியது.

தனக்குப் பிடித்தது மற்றவர்களுக்கும் பிடித்திருக்க வேண்டும் என்ற நம்பிக்கை அதற்கு.

எங்கே பெரியவர், யாராகிலும் வந்து தன்மீது மோசடிக் குற்றம் சாட்டப்போகிறார்களோ என்ற பயத்தில் நாலுபக்கமும் சுற்றிப் பார்த்துக்கொண்டு, "ஓங்கிட்டே துட்டு இருக்கா?" என்று கேட்டான் பிச்சைக்காரன்.

"இந்தா, ஒரு புதுத் துட்டு" என்று குழந்தை அவன் வசம் நீட்டியது.

அவன், குழந்தை கொடுத்ததைச் சட்டென்று வாங்கிக்கொண்டான். அது ஒரு புதுத் தம்படி. கோடீசுவரர்கள் அன்னதான சமாஜம் கட்டிப் பசிப் பிணியைப் போக்கிவிட முயலுவதுபோல், கடலில் காயம் கரைத்து வாசனை யேற்றிவிட முயலுவதுபோல், குழந் தையும் தானம் செய்துவிட்டது.

பஞ்சடைந்த கண்ணோடு கிழவன் தகரப்பீப்பாயைப் பிடித்துக்கொண்டு செத்துக்கொண் டிருந்தான். ஜனங்கள் போய்க்கொண் டிருந்தார்கள்; வந்துகொண் டிருந் தார்கள்.

இந்த நிலையில் அவசரமாகப் போய்க்கொண் டிருந்த நபர் ஒருவரின் கையிலிருந்து ஓரணச் சிதறிக் கீழே விழுந்தது. அதுகூட நினைவில்லாமல் அவரும் நடந்து கொண்டு கூட்டத்தில் மறைந்தார். அவ்வளவு அவசரம்.

உட்கார்ந்திருந்த பிச்சைக்காரன் அதைக் கவ்வியெடுத்தான். ஒருவரும் பார்க்கவில்லையேயென்று சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டான்.

"நீ போம்மா" என்று குழந்தையைப் பார்த்து மீண்டும் ஒருமுறை சொல்லிப் பார்த்தான்.

குழந்தை, "மாட்டேன்" என்று காலைப் பரப்பிக் கொண்டு நின்றது. முகத்தை வலித்து, 'அழகு' காட்டியது.

"பாவா, கொஞ்சம் பாலு வாங்கியாறேன்" என்று சொல்லிக்கொண்டு இளம் பிச்சைக்காரன் எழுந்து எதிர்ச் சாரி 'ஓட்டலை' நோக்கி நடந்தான்.

இது கிழவன் காதில் படவில்லை. அவன் தகரப்பீப் பாயைப் பிடித்துக்கொண்டு செத்துக்கொண் டிருந்தான்.

குழந்தைக்கு அவனை நன்றாகப் பார்க்க முடிந்தது. அருகில் போய் நின்றுகொண்டு வேடிக்கை பார்த்தது. இப்பொழுது விரட்டுவதற்குச் 'சின்னப் பூச்சாண்டி' இல்லையல்லவா? தனக்குப் பக்கத்தில் குழந்தை நிற்பது கிழவனுக்குப் பிரக்ஞை இல்லாததால் தெரியவில்லை. அவன் ஓட்டைப் பீப்பாயைப் பிடித்துக் கொண் டிருந்தான். அவனும் ஒரு பெரிய "ஓட்டை ஒடசல்" ஐந்துதானே! குழந்தைக்கு அவனுடைய மூஞ்சி, தாடி, அவன் வாயைத் திறப்பது எல்லாம் புதுமை. அவ னுடைய நீலம் பாரித்த உதட்டில் ஓர் ஈ வந்து உட்கார்ந் தது; இரண்டாவது ஈ வந்து உட்கார்ந்தது; அதை ஓட்ட அவன் வாயைத் திறந்து உதட்டைக் கோணுவது குழந்தைக்கு வேடிக்கையாக இருந்தது. என்னநினைத்ததோ மெதுவாகப், "பாவா" என்று இளம்பிச்சைக்கார னைப் போலக் கூப்பிட்டுப் பார்த்தது. உள்ளுக்குள் பயம், பூச்சாண்டி எழுந்து உட்கார்ந்து கொள்ளுமோ என்று.

படுத்துக் கிடந்தவன் கண்கள் விரியத் திறந்திருந்தன: கண்ணின் மணியின்மேல் ஓர் ஈ வந்து உட்கார்ந்தது......

"என்னடி, அங்கே போய் நிக்கறே; ஒன்னை எங்கெயெல்லாம் பார்க்கிறது?" என்ற ஓர் அதட்டல் கேட்டது. பேரம் தர்க்கமாகி, தம் கணக்குக்குக் கூடைக்காரியை ஒப்புக்கொள்ள வைத்து இரண்டு மாம்பழங்களை வாங்கி வந்தவரின் நியாயமான கோபம் அது.

"இல்லேப்பா, அது பாவாப் பூச்சாண்டி; பாத்துண்டிருந்தேன்" என்றது குழந்தை ஓடி வந்துகொண்டே.

சிலர் மட்டும் ஏறிட்டுப் பார்த்தார்கள்.

குழந்தையைத் தூக்கிக்கொண்டார் அவர்; அது பழத்தைத் தூக்க முடியாமல் தூக்கி மோந்து, "வாசனையா இருக்கே!" என்று மூக்கு நுனியில் வைத்துத் தேய்த்துக்கொண்டது.



## உலகத்தின் அழுகைகள்

கல்யாணமாகி இன்னும் மூன்று நாட்கள் கூட ஆகவில்லை. ஏன் - வெளியில் கட்டிய தோரணங்களே நன்றாக உலரவில்லையே?

அந்த வீட்டு மெத்தையில் ஓர் அறை. அதில் புத்தகத்தில் ஈடுபட்ட ஒரு வாலிபன்; அந்தக் கல்யாண மாப்பிள்ளைதான்!

ஏடுகள் புரண்டுகொண்டிருந்தன. கண்கள் கனவு கண்டுகொண்டிருந்தன. மனம் சிருஷ்டித் தொழிலைக் கைக்கொண்டால் பிறகு எவ்விதம் இருக்கும்?

மேடைப் படிகளிலே 'சிலிங், சிலிங்' என்ற பாதசரம்; வாலிபன் முகத்தில் ஆவலின் பரபரப்பு அலைபோல் எழுந்தது.

காப்பிதான் வருகிறது!

ஆசை, காப்பியின் மேலா? அல்ல!

ஒரு பெண் - நாணமே உருவெடுத்த மாதிரி — ஒரு வெள்ளித் தம்ளரில் காப்பியைக் கொண்டு வைத்துவிட்டு, ஒதுங்கி வெளியே போக யத்தனித்தாள்.

அழகு எல்லாம் சாதாரணந்தான். ஐயோ அந்தக் கண்கள்!

"கண்ணு, எனக்கு ஒரு முத்தம்!" கண்களில் ஒரு மிரட்சி.

"என்ன கண்ணு?"

சற்றுத் தயக்கம். ஏதோ ஒரு மாதிரி உதட்டுடன் உதடு பொருந்திய சப்தம் வந்தது. இது முத்தமா? உயிர் இல்லை. இன்பம் ஏற்றும் மின்சாரம் இல்லை.

சுந்தரத்திற்கு - அவன் தான் - ஒரு பெருமூச்சு வந்தது. இவள் தனது கனவின் பெண் அல்ல - தகப்பனார் பார்த்து வைத்த பெண். எப்படியோ தன் வாழ்க்கையில் வந்து பின்னிக் கொண்டாள்.

இவனுடைய ஆவேசம் பொருந்திய முத்தம், "ஐயோ" என்ற எதிரொலியைத்தான் எழுப்பியது.

"கண்ணு எனக்கு ஒரு முத்தம்!"

ஐந்து நிமிஷம் தயக்கம். கரங்கள் மெதுவாகக் கழுத்தில் சுருண்டன. கேசம் கண்களை மறைத்தது. அதரங்கள் முகத்தில் சற்று உலாவி அதரத்தின் மேல் பறந்து விலகின. சுந்தரத்தின் முன் இருந்த இந்த இன்ப மற்ற உடல் திரை விலகியது. சுந்தரத்தின் கண்களில்

ஏமாற்றத்தின் கோபம். "போ! உனக்கு என் மேல் பிரியமே கிடையாதே? போ! போ!"

கமலாவின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர்.

"போங்கள்! பக்கத்திலிருந்து பேசிக்கொண் டிருக்கக் கூடாதா...நீங்கள்..." - கண்கள் சுந்தரத்தின் பக்கத்தி லிருந்த வெற்றிலைச் செல்லத்தில் நீட்டிக்கொண் டிருந்த புகையிலைத் துண்டைக் கவனிப்பதுபோல் இருந்தன. முன்றானை தன்னை அறியாமலே உதட்டைத் துடைத்தன.

சுந்தரத்தின் கண்களில் ஓர் ஒளி! குதூகலம்! எழுந்தான். கமலாவை, ஆலிங்கனமா? - இவனுள் ஐக்கியமாகி விட்டாள். முத்தங்கள்...... நெற்றியில் கண்களில்......அதரங்களில்......எவ்வளவு ஆவேசம்! என்ன உயிர்!

கமலாவிற்குக் கவலை அறியாத ஒரு புது உணர்ச்சி. அவள் அதரங்கள் அவளை அறியாமல் பதில் பேசின.

* * * *

ஒன்றரை வருஷங்கள்!

தொட்டிலில் ஒரு குழந்தை.

"கண்ணு! கண்ணு! இதோ, இங்கே பார்! ஓடிவா!"

"என்ன" என்று கூறிக்கொண்டே சிரித்த கண் களுடன் வராந்தாவிற்கு ஓடிவந்தாள்.

"இங்கே வா! அதோ பார், இந்தக் கிளையில் அந்த அணிலை! எப்படி வாயில் குட்டியைக் கவ்விக் கொண்டு! இலை மறைந்திருக்கிறது; என் பக்கம் இன்னும் கிட்டவா! அதோ பார் அந்தக் கிளையில்" என்று அவளைத் தன் பக்கம் அணைத்த வண்ணம் தன் கைகளைக் காட்டினான்.

"ஆமாம்! ஆமாம்! ஐயோடி! எனக்கு வேண்டும். பிடித்துத் தரமாட்டீர்களா?" என்று அத்திசையை நோக்கிய வண்ணம் கைகளை உதறினாள்.

சுந்தரத்தின் கண்களில் ஒரு குறும்புச் சிரிப்பு. பேசாமல் உள்ளே சென்றான். கமலா அதைக் கூடக் கவனிக்கவில்லை.

"இதோ வந்து விட்டது! ஐயோடி! சீக்கிரம் வாருங்கோ!" என்று பதைத்தாள் கமலம்.

சுந்தரம் ஒரு குழந்தையை - தங்கள் வாழ்க்கையின் அர்த்தத்தை, தங்கள் காதலின் லக்ஷ்யத்தை - எடுத்துக் கொண்டு வந்து அவளிடம் நீட்டிக்கொண்டு, "இதோ பிடித்துத் தந்திருக்கிறேன்! இதை விடவா?" என்று சிரித்தான்.

கமலாவின் கண்களில் ஓர் அற்புத ஒளி! சுந்தரத்தை அப்படியே தூக்கி விழுங்கி விடுவது போல், ஒரு முத்தத்துடன் அணைத்தாள். குழந்தை 'வீல்' என்று குரலிட்டுத் தான் இருப்பதைத் தெரிவித்தது.

உடனே குழந்தையைக் கையில் பிடுங்கி மார்பில் அணைத்துக்கொண்டு அவரைப் பார்த்த வண்ணம், "எனக்கு இரண்டு பாப்பா இருக்கே! என்னடி மீனு!" என்று குழந்தையுடன் அவன்மீது சாய்ந்தாள். மூவரும் ஒருவராயினர்.

* * * *

இருபது வருஷம்!

சாயந்தரம்.

வெளி வராந்தாவில் ஒரு பெண் குழந்தை விளையாடிக் கொண்டிருக்கிறது. மீனுவின் குழந்தை.

இருவரும் உட்கார்ந்திருக்கிறார்கள். நரைத்த தலை; தளர்ந்த உடல்.

கமலாப்பாட்டி, சுந்தரம் தாத்தாவுக்கு வெற்றிலை தட்டிக்கொண் டிருக்கிறாள்.

வெற்றிலைப் பொடியை வாயில் போட்டுக் கையைத் துடைத்துவிட்டு, "கண்ணே ஒரு முத்தம்" என்று குழந்தையை நோக்கிக் கைகளை நீட்டினார்.

"மாத்தேன் போ" என்று காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு சிரித்தது குழந்தை.

"தாத்தா கண்ணே! பாட்டி கண்ணே!" என்று குழந்தையை நோக்கிக் கமலம் கைகளை அசைத்தாள்.

"மாத்தேன் போ!" - சிரிப்புத்தான்.

இருவரும் ஒத்துப் பேசியதுபோல ஏகோபித்துக் குழந்தையை எடுக்கிறார்கள்.

சுந்தரம் தாத்தா, "மாத்தேன் போ" என்று திருப்பிக் கொண்டே கழுத்தில் முத்தமிடுகிறார். கமலம் மார்பில் முத்தமிடுகிறாள்.

இருவர் கண்களிலும் அதே ஒளி!



## நியாயந்தான்

வடலூர் குமாருபிள்ளை கொழும்புக்குப் போவ தென்று ரெயிலேறியபொழுது ஐ. பி. கொடுத்துவிட்டு மேல் துண்டை உதறிப்போட்டுக் கொண்டுதான் புறப் பட்டார். தகப்பனாரது திடீர் மரணத்தால், மேல்வீழுந்து அமுக்கிய கடன்காரர்களுக்குப் புகல்சொல்ல அந்த ஒரு வழிதான் தெரிந்தது. மேலும் அவர் மற்றவர்களைப்

போல் 'ஒதுக்கி வைத்து'க்கொண்டு கைகளை விரிக்கவில்லை. அப்பொழுது அவருக்கு அநுபவம் போதாது. பள்ளிக் கூடம் என்ற சொப்பன உலகத்தின் வாசகங்களை உண்மையாகவே நம்பி மோசம்போனார். உபாத்தியாயர்கள் கற்பித்துக் கொடுக்கவும், பெரியவர்கள் பிரசங்க மேடையில் வாசாமகோசரமாகப் பேசவும் முன்னோர்கள் எழுதிவைத்துப் போனதை உபயோகித்துப் பார்த்தார். கை சுட்டது. தூத்துக்குடி போகும் வண்டியின் மூன்றாவது வகுப்பில் உட்கார்ந்த பின்புதான் சுமையை இறக்கி வைத்த ஆசுவாசம் ஏற்பட்டது.

கொழும்பிலும் அவரது லக்ஷ்யம் பிரமாதப்பட்டுப் போகவில்லை. வர்த்தக உலகைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஆசை ஒன்றும் அவருக்கு இல்லை. ஏதாவது வெங்காயக கிட்டங்கியில், சொன்னதைச் செய்துவிட்டு, நாலு காசு சம்பாதிக்க வேண்டும் என்பதே நோக்கம். தாமோ தனிக்கட்டை! ஊரில் உள்ள தாய்க்கு மாசம் மூன்று ரூபாய் அனுப்ப வழி கிடைத்தால் போதும் என்பதே அவரது பரிபூரணமான ஆசை.

கொழும்புக்குப் போவதென்றால் மேல் துண்டுடன், அதையே துணையாக நம்பிச் செல்லுகிறவர்களுக்கு உபவாச மகிமைதான் ஸ்டேஷனில் காத்திருக்கும். அது பிள்ளையவர்களுக்குத் தெரியாது. டிக்கட்டுக்குப் பணம்; அதற்கு மேல் ஒரு வேளை சாப்பாட்டுக்குச் சில்லறை; இதுதான் அவரது ஆஸ்தி. வியாபாரம் செய்து லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் கொழும்புக்கு வருகிறவர்கள், மேல் துண்டையே மூலதனமாகவும் ஜாமீன் பேர்வழியாகவும் கொண்டு வருகிறவர்களிடம், வசூல் பட்டியலையோ, ஸ்டோர் அறையின் சாவியையோ ஒப்படைத்து விடுவார்களா? அவ்வளவு

வேண்டாம் - நட்ட நடுப் பகலில் கடைக்குள் ஏறி அவர்கள் கண் முன்பே நடமாட விடுவார்களா? வெள்ளைக்காரர் 'ஸ்லேவ் ஐலண்ட்' என்ற யதார்த்தமான பெயரைக் கொடுத்திருக்கும் சரகத்தில் வசிக்கும் கிட்டங்கிப் பிள்ளைமார்களும் முதலாளிமார்களும் பிள்ளையவர்களை நம்பாததில் அதிசயமில்லை. அவர் அந்தப் பக்கத்தில் ஏறியிறங்காத கடை பாக்கியில்லை; ஜன சங்கியைக் கணக்கு உத்தியோகஸ்தரின் நுணுக்கத்துடன் கடை க்ஷேத்திர யாத்திரை நடைபெற்றது. இதற்குள் மூன்று நான்கு நாட்கள் கழிந்து விட்டன. அன்னிய நாட்டான் பிச்சை எடுக்க ஆரம்பித்தால், இங்கிலாந்து முதலிய இடங்களில் தாய் நாடு திரும்புவதற்காவது வழியுண்டு. பிடித்துக் கப்பலேற்றி விடுவார்கள். கொழும்புச் சட்டங்கள எப்படியோ? வடலூரர் குமாரு பிள்ளையின் மனம் பிச்சை எடுக்க ஒப்பவில்லை. அதனால்தான் அப்படிப் பட்ட சட்டம் அங்கிருக்கிறதா என்று தெரிந்து கொள்ள வழியில்லாமல் போய்விட்டது.

வர்த்தகத்திற்கும் ஏகாதிபத்தியத்திற்கும் ராணுவ பலம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு தெய்வ பக்தியும் அவசியம். இந்த உண்மையைப் பிரிட்டிஷ்காரர் மட்டிலும் தெரிந்துகொண் டிருக்கவில்லை; கொழும்புப் பிள்ளைமாரும் தெரிந்துகொண் டிருந்தனர். ராணுவ பலத்தைப் பொறுத்த வரையில் யானைக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்பொழுது அதன் மீது ஊரும் எறும்புக்கும் அது கிடைக்கும் அல்லவா? அதனால் வெள்ளைக்காரனுக்குக் கிடைக்கும் பாதுகாப்பில் தம் நம்பிக்கையைப் போட்டு விட்டு, பக்தி விஷயத்திற்காக மட்டிலும் ஒரு சிறிய பிள்ளையார் கோயிலைக் கட்டி அதற்குப் பக்கத்தில் ஒரு கிணறு ஒன்றையும் வெட்டிப்

போட்டார்கள். பெரிய முதலாளிமார்கள் தர்பாராக வந்து, கடைச் சிப்பந்திகள் தண்ணீர் இறைத்து ஊற்ற, குளித்து விட்டுப் பிள்ளையாரை அவரவர் உயர்வு ஏர்வைகளுக்குத் தக்கபடி வழிபட்டுவிட்டுச் செல்வார்கள். தனித் தனி நபரின் பக்திப் பெருக்கு, டைபாய்ட் வியாதியஸ்தனின் டெம்பரேச்சர் படம் மாதிரி அன்றைய வியாபார ஓட்டத்தைப் பொறுத்ததாக இருந்தாலும், பொதுவாகச் சங்கத்தினரின் முழு ஆதரவு இருந்ததால் விநாயகர் பாடு சராசரி பக்தி விஷயத்திற்கு மோசமாகி விடவில்லை. அதிகாலை ஏழு மணிக்கு அந்தப் பகுதியில் நோக்கும் திசை எல்லாம் 'நடமாடும் கோயில்கள்' தாம். பிள்ளையார் கோயிலின் நைவேத்திய விசேஷங்கள் சிறிய சிப்பந்திகளிடையே பக்திக் கவர்ச்சிக்குத் தூண்டுதலாக இருந்தது.

வடலூரார்ப் பிள்ளையும் சித்தி விநாயகர் பக்கத்தில் கோயில் கொண்டருளினார். பிள்ளையார் மனநிலையைப் பற்றி அறிந்து கொள்ள, எனக்குத் தேவதையின் மனோதத்துவ சாஸ்திரம் தெரியாது. பிள்ளையவர்கள் மனசில் மட்டிலும் கசப்பு, கசப்பு, கசப்பு. கோயில் ஐயர் ஒரு நாளைக்கு மட்டிலும் ஏதோ கொடுத்தார். அதில் அவர் மனசு அபார மகிழ்ச்சி கொண்டுவிடவில்லை. மேலும் பிள்ளையாரைப் போல் நிர்விசார சமாதியிலிருக்க அவர், கல் அல்ல. அவர் மனசில் எரிமலைகள் சீறின; புதிய சமூக சாஸ்திரங்கள், ஒழுக்கக் கட்டுப்பாடுகள் தோன்றின; நியாயமானவை என்று அறிவை நம்பும்படி வற்புறுத்தின. இப்படிப்பட்ட தத்துவ ஆசிரியனைப் பரிணமிக்கும் சமயத்தில்தான், உடையாள்புரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பக்திக் கண்கள், வடலூரார்த் துயரத்தின் பிண்டத்தைக் கண்டன.

மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் கண்கள் மூன்று தினங்கள், அவரை அதே இடத்தில் பார்த்தன. உமையாள்புரத்து ஆசாமி, ஆற அமரச் சிந்திப்பதில் விசேஷத் தன்மை வாய்ந்தவர். அதனால்தான் மூன்றாம் முறையாக வடலூர்க் குமாரு பிள்ளையைக் கண்டபொழுது அவர் மூர்ச்சையுற்றிருக்க வேண்டியதாயிற்று. ஏனென்றால் பிள்ளையவர்கள் காற்றைப் புசித்து வாழும் கரடிவித்தை கற்றவரல்ல. கற்றிருந்தால் இந்தக் கொழும்புப் பிரயாணமே சித்தித்திருக்காது. மீனாட்சி சுந்தரம் பிள்ளைதான், அவருக்கு மூர்ச்சை தெளிவித்து 'உனக்கு என்ன செய்கிறது?' என்றார். 'பசிக்கிறது' என்றார் வடலூர்ப் பிள்ளை சுருக்கமாக. உமையாள்புரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஓர் உயிர்ப் பிராணிக்கு உதவி செய்வது என்று உறுதி கொண்டு விட்டார். காரணம், அன்று விடியற் காலந்தான் வேலைக்காரப் பையன் ஒருவன் முறைத்துக்கொண்டு வெளியேறி விட்டான். எண்ணெய் தேய்த்து விடுவதிலும் கால் பிடிப்பதிலும் நிபுணன் அவன்.

உமையாள்புரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் கடையில் சிப்பந்தியா யிருப்பதில் அவருக்கு அவ்வளவு அபார மகிழ்ச்சியும் ஏற்படவில்லை; சேவகம் என்பதற்காக அதிருப்தியும் ஏற்படவில்லை. கடைசியாக விநாயகக் கடவுளின் அருள் என்ற நம்பிக்கை ஏற்படாததும் ஆச்சரியந்தான். ஏனென்றால் விருத்தாந்தத்தைக் கேட்ட, ஐந்தாறு நாட்களுக்கு முன்தான் 'வேலையில்லை போ' என்று விரட்டிய உமையாள்புரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, விநாயகக் கடவுளின் பரிபூரணமான அருள் அது என்று நினைத்தார். ஆனால் பிள்ளையவர்கள், தமது பிரக்ஞையிழப்பின் அருள் என்று நம்பினார்; அப்படி வெளிப் படையாகச் சொல்லிக் கொள்ளவில்லை.

பிள்ளையவர்களுக்கு இருந்த ஒரே ஆசையெல்லாம் திருநெல்வேலிக் கடன்காரர்களைத் தம் காலடியில் வைத்து ஆட்டிப் பார்க்கவேண்டும் என்பதே. அது சாத்திய மில்லாததால், தம்முடன் நெருங்கி, தாம் வசிக்க நேர்ந்த சமுதாயத்தைக் காலடியில் கொண்டு வந்து வைத்து, ஒரு நாளைக்காவது கண்ணில் விரலை விட்டு ஆட்டவேண்டும் என்பதே! இந்த ஆசை, பசியின் சாயை மறைய மறையப் பிரம்மாண்டமாக வளர ஆரம்பித்தது. உமையாள்புரம் பிள்ளை, வடலூர்ப் பிள்ளையைப் பண வசூலுக்கும் சரக்குப் பிடிக்கவும் அனுப்ப ஆரம்பித்தார். பல முதலாளி களுடன் பழக்கம் ஏற்படுத்திக் கொள்ளச் சந்தர்ப்பம் அளித்தார்.

கொழும்புக் கடைகளில் உதவித் தொழிலுக்குப் போகிறவர்களுக்கு எப்பொழுதாவது தனிக் கடை ஆரம் பிக்கலாம் என்ற நம்பிக்கை இருக்கும்; அல்லது ஏற்படும். பிள்ளையவர்கள் விஷயத்திலும் இது ஏற்பட்டது.

வடக்கத்தி சேட் ஒருவன் இவரை நம்பிப் பணம் கொடுக்க உத்தேசித்தான். தவிரவும் உமையாள்புரம் பிள்ளையும் ஏதோ உதவினார். ஒரு நல்ல நாளில் வடலூர்ப் பிள்ளையின் சொந்தக் கடை திறக்கப் பட்டது. முதலாளி ஸ்தானத்தைப் பெற்றுவிட்டால் வியாபார அநுபவம் வந்துவிடுமா? அதனால்தான் ஆள் வைத்துக் கடை நடத்த வேண்டியதாயிற்று. வியாபார நுணுக்கம் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், முதலாளியான பிறகு வைப்பாட்டி வைத்துக் கொள்ளாமல் இருப்பது கௌரவக் குறைவு. அதை உத்தேசித்தோ அல்லது இயற்கையின் தேவையாலோ மலிவான சிங்கள வைப்பாட்டியை வைத்துக் கொண்டார்.

பிள்ளையவர்கள் தொழிலை ஆரம்பித்த நேரத்தின் விபரீதமோ என்னவோ? வர்த்தக உலகத்தில், பணம் புரளுவது கஷ்டமாயிற்று. பெரிய பெரிய விலாசங்கள் இரண்டு மூன்று தொடர்ந்தாற்போல் முறிந்தன. கடன் காரரின் பிடுங்கல் அதிகமாயிற்று. பிள்ளையவர்களின் வியாபார ஓட்டமும் அவ்வளவு தெளிவில்லை. திருநெல்வேலிக் கதை மறுபடியும் கொழும்பிலும் 'ஒன்ஸ் மோர்' அடித்துவிடுமோ என்ற பீதி அதிக மாயிற்று. ஆனால் மிரண்டுவிடவில்லை. பேச்சு வெளி வராமல் இருக்க, சரக்குகள் அதிகமாக வாங்க ஆரம்பித்தார். திடீரென்று மூன்று கிடங்குகள் வாடகைக்கு அமர்த்தப் பட்டன. அன்று சாயங்காலத்திற் குள்ளாகவே அவ்வள விலும் லக்ஷ ரூபாய்க்குச் சரக்கு. சாயங்காலம் கடையடுக்கும் பொழுது சிப்பந்திகளைக் கூப்பிட்டுச் சம்பளமும், அதற்குமேல் ஐந்தும் பத்தும் கொடுத்து, கணக்குத் தீர்ப்பதுபோல் காட்டிக் கொள்ளாமல், கண்களில் மண்ணைத் தூவினார். கடை, கிடங்கு எல்லா வற்றையும் இழுத்துப் பூட்டிச் சீல் வைத்தார்; சிங்களத்தியின் வீட்டுக்குப் போய்விட்டார்.

மறுநாள் காலை மணி ஒன்பதாகியும் கடை திறக்கப் படவில்லை. வடலூரார்ப் பிள்ளையும் முறிந்து போனார் என்ற செய்தி காட்டுத் தீப்போலப் பரவியது. சேட்ஜி களும், சிறிய கடைக்காரர்களும் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்ளவில்லை; மனமார, வாயாரத் திட்டினார்கள்.

சிங்களத்தியின் வீட்டில் இருப்பதாகத் துப்புத் தெரிந்தது. எல்லாரும் ஒருமிக்க வீட்டுக்குள் புகுந்தார்கள். 'பேமானிப் பயலே!...' என்று ஆரம்பித்தார் சேட்ஜி. மற்றவர்களும் அவர்கள் குலாசாரப்படி திட்டினார்கள்.

பிள்ளையவர்கள் அமைதியாகக் கல்லைப்போல் இருந்தார்...சந்தடி ஓய்ந்ததும், "உங்களை ஏமாற்றுவது என் நோக்கம் அல்ல...கடன் எல்லாவற்றையும் பைசா விடாமல் கொடுக்கவேண்டும் என்பதுதான் என் ஆசை. பெரிய முதலாளிகளே தயங்குகிறார்கள். ஒரே சமயத்தில் எல்லாரும் கேட்டுவிட்டால், எல்லாருக்கும் நஷ்டமாகுமே என்பது என் வருத்தம். இப்பொழுது சொல்லுகிறேன்: நீங்கள் கொடுத்திருக்கும் கடனைத் தவணையாகப் பெற்றுக் கொள்ளுகிறீர்களா? அப்படியானால் பாக்கியில்லாமல் செலுத்துகிறேன். இல்லாவிட்டால் கோர்ட்டுக்குப் போய் இருக்கிறதைப் பங்கு போட்டுக் கொள்ளுங்கள்" என்று கடைசியாகச் சொன்னார். வர்த்தகர்கள் பீதி யடித்துப் போனார்கள். 'இப்பொழுது வசூல் செய்தால் தம்படிக்கூடத் தேறுமோ என்னவோ? அவன் தவணை மூலம் பூர்த்தி செய்வான் என்பது எப்படி நிச்சயம்?' - ஒரு வழியாக நிர்ணயிக்க முடியவில்லை. முடிவில் அவரைத் திட்டிவிட்டுச் சென்றார்கள்.

வடலூரார்ப் பிள்ளை அதனுடன் தூங்கப் போய் விடவில்லை; அல்லது ஊருக்கும் கம்பி நீட்டவில்லை. ஒரு முரட்டு வக்கீலைப் பிடித்து அமர்த்தினார். அவன் கையில் தம் வழக்கையும் யோசனையையும் ஒப்படைத்தார். வக்கீல், கடன் கொடுத்திருந்தவர்களின் பட்டியல் தயாரித்து அவரவர்கள் தொகைக்குத் தக்கபடி விகிதாசாரம் போட்டு, முடிவு கூற ஒருமாதம் நோட்டீஸ் கொடுத்து அனுப்பினான். சிறு கடன்காரர்கள், கிடைத்தது போதும் என்று ஒன்றுக்குக் காலாக வாங்கிக்கொண்டு ஓடினர். இப்படி மெஜாரிட்டித் தொல்லை ஒழிந்தது. மற்றும் பெரிய புள்ளிகள், வேறு விதியில்லாமல் நிபந்தனையை ஏற்றுக் கொண்டனர்.

கையில் மூலதனம் போடாமல் ஒரு லக்ஷ ரூபாய் சரக்கு; அது இருக்கும்பொழுது தவணை செலுத்து வதற்குமா வலிக்கிறது? மாதம் முதல் தேதியன்று 'டண்ணர்' என்று ரொக்கம் நபருக்குப் போய்விடும். ஆனால், மார்க்கெட்டில் பிள்ளையவர்கள் நம்பிக்கையை இழந்து விட்டார். நெடுங்காலம் வரையில் அந்தக் கறுப்புப் புள்ளி மாறவில்லை. தவணை குறியாகச் செலுத்தியது அவரிடம் நம்பிக்கையை, அவருக்குக் கிழடு தட்டிய பின்பே வருவித்தது. அவருடைய தொழிலும் நன்றாக வளர்ந்தது. பத்து வருஷங்கள் கொழும்பு வியாபாரமே அவரது கைக்குள் என்ற நிலைமை உண்டாயிற்று.

மூலதனம் பெறுவதற்கு வடலூர்ப் பிள்ளை செய்தது சரியா, தப்பா? சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டார். அப்புறம் நாணயஸ்தனாக இருந்தாரே? முதலில் அவரது கை ஓய்ந்து கிடக்கும்பொழுது அவரை நசுக்கிப் போட வேண்டுமென்று, சமூகம் என்ற தனித் தன்மையற்ற ஒன்று, நினைத்ததே! அவர் செய்தது தவறானால், முதலில் அவர் ஐ. பி. போட வேண்டிய நிலைமையை ஏற்பட வைத்தது மட்டும் சரியா? ஓய்ந்து சள்ளுச் சள்ளென்று இருமும் காலத்திலும் வடலூர்ப் பிள்ளைக்கு ஓயாத வேதாங்கமாகிவிட்டது இந்தமாதிரிப் பேச்சு.



# சுப்பையா பிள்ளையின்
## காதல்கள்

வீரபாண்டியன் பட்டணத்து ஸ்ரீ சுப்பையா பிள்ளை ஜீவனோபாயத்திற்காகச் சென்னையை முற்றுகையிட்ட பொழுது, சென்னைக்கு மின்சார ரெயிலோ, அல்லது மீனம்பாக்கம் விமான நிலையமோ ஏற்படவில்லை. மாம்பலம் என்ற 'செமன்ட்' கட்டிட நாகரிகம் அந்தக் காலத்திலெல்லாம் சதுப்பு நிலமான ஏரியாக இருந்தது. தாம்பரம் ஒரு தூரப் பிரதேசம்.

திருநெல்வேலியிலே, ரெயில்வே ஸ்டேஷன் சோலைக்குள் தோன்றும் ஒற்றைச் சிகப்புக் கட்டிடமாக, 'ஜங்க்ஷன்' என்ற கௌரவம் இல்லாமல், வெறும் இடைகழி ஸ்டேஷனாக இருந்தபோது திருவனந்தபுரம் 'எக்ஸ்பிரஸ்' மாலை நாலு அல்லது ஐந்து மணிக்குத் தஞ்சாவூர் மார்க்கமாகச் செய்த நீண்ட பிரயாணத்தின் சின்னங்களுடன் சோர்வு தட்டியதுபோல வந்து நிற்கும். அந்தக் காலத்தில் வீரபாண்டியன் பட்டணத்துக்குப் போக வேண்டும் என்றால், தபால் வண்டியானால் மலிவு; பிரம்மாண்டமான லக்ஷ்மி விலாஸ், கணபதி விலாஸ் சாரபங்க் ஏறினால் சீக்கிரம் செல்லலாம். அப்பொழுதெல்லாம் திருநெல்வேலி மைனர்கள் ஸ்ரீ வைகுண்டம் வைப்பாட்டிமார் வீடுகளுக்கு ஜட்கா வண்டியில் போய்விட்டு இரவு பத்து மணிக்கெல்லாம் திரும்பி விடுவார்கள். அந்தக் காலத்தில் எல்லாம் ஜட்கா என்றால் அவ்வளவு 'மௌஸ்'.

அந்தக் காலத்திலெல்லாம் ஸ்ரீ சுப்பையா பிள்ளை ஒரு வாலிடன். ஊரையே வளைத்துக் கோட்டை கட்டிவிடும்படிப் பணம் சேர்த்துக்கொண்டு வந்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் புறப்பட்டவர் இன்னும் ஒரு முறைகூட, - அதாவது தம் கல்யாணம், தம்முடைய தகப்பனுர் மரணம் இவைகளுக்காக ஐந்தாறு நாட்கள் ரஜா எடுத்துக்கொண்டு அந்தப் பிரதேசத்திற்கு மின்வெட்டு யாத்திரை செய்தது தவிர - மற்றப்படி ஒரு முறைகூடச் சென்றதே இல்லை.

'தனலட்சுமி பிரொவிஷன் ஸ்டோர்ஸ்' பூர்வத்தில் பேட்டைப் பிள்ளை ஒருவரால் பவழக்கார தெருவில், அப்பகுதியில் வசிக்கும் திருநெல்வேலி வாசிகளின் சுயஜாதி அபிமானத்தை உபயோகித்துச் சிலகாலம் பலசரக்கு வியாபாரம் நடத்தியது. அந்த வியாபாரத்தில் ஸ்ரீ சுப்பையா பிள்ளையும் பண வசூல், கணக்கு, வியாபாரம் என்ற நாலுவித இலாகாக்களையும் நிர்வகித்தார், அதாவது 'மான்ட்போர்ட்' சீர்திருத்தக் காலத்து மாகாண மந்திரிகள் மாதிரி. பிறகு 'தனலட்சுமி ஸ்டோர்ஸ்' ஜவுளிக் கடையாக மாறி, திருநெல்வேலி மேலரத வீதி ஜவுளி வர்த்தகர்களில் சில்லறைப் பேர்வழிகளுக்கு மொத்தச் சரக்குப் பிடித்துக் கொடுக்கும் இணைப்புச் சங்கிலியாகி, பெரிய வர்த்தகம் நடத்துவதற்குக் காரணம் கம்பெனிக்கு ஆரம்பத்தில் கிடைத்த ஆதரவிஞல் ஏற்பட்ட லாபம் என்பதுடன், எதிரில் திறக்கப்பட்ட 'மீனுட்சி பிரொவிஷன் அன்ட் பயர்வுட் ஸ்டோர்ஸ்' என்பதை மறந்து விடலாகாது. இது தஞ்சாவூர் ஐயர் ஆரம்பித்த கடை. சர்க்கரையாகப் பேசுவார்; பற்று வரவும் சௌகரியத்திற்கு ஏற்றபடி இருந்தது. அவர் கடையில் கணக்கு வைத்ததால், குடும்பத் தலைவர்கள்

வீட்டுத் தேவைகளுக்கு என்று தனி சிரமம் எடுத்துக் கொண்டு வெளியில் காலடி எடுத்து வைக்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று. மேலும் 'தனலட்சுமி ஸ்டோர்ஸ்' முதலாளி, தமக்கு அந்தப் பகுதி 'திருநெல்வேலிச் சைவர்களுடன், ஏற்பட்ட நெருங்கிய தொடர்பால், கடையில் நேரடியாக வந்து வாங்குகிறவர்களுக்கு ஒரு மாதிரி, வீட்டில் இருந்துகொண்டு கணக்குச் சிட்டையை அனுப்பி மாசாமாசம் பாக்கி வைப்பவர்களுக்கு ஒரு மாதிரி, என்று நடக்க ஆரம்பித்ததும் இதற்கு ஒரு துணைக் காரணம். விசேஷமாக மண்பானைச் சமையல் என்ற விளம்பரங்களுடன் சைவச் சாப்பாட்டு ஹோட்டல் ஒன்றும் மூடப்பட்டது. அதாவது 'தனலட்சுமி ஸ்டோர்ஸி'ல் மொத்த வியாபாரம் நடத்திய ஹோட்டல் பிள்ளை, ஊரோடு போய்ச் சௌகரியமாக வாழவேண்டும் என்ற நோக்கத்துடன் 'ரிட்டயராகி' விட்டார்; சாத்தூர் 'டிவிஷ'னில் அவருடைய மகன் 'ரெவின்யூ இன்ஸ்பெக்டர்' உத்தியோகம் பார்த்ததால் அவருக்கு ஹோட்டல் நடத்துவது அகௌரவமாக இருந்தது. நிலபுலன்களைப் பார்க்கப் போவதாகச் சென்னைக்குச் செலவு பெற்றுக் கொண்டார். இப்படியாகத் 'தனலட்சுமி ஸ்டோர்ஸ்' ஜவுளிக்கடையாக மாறியது.

இந்த மாறுதலால் ஸ்ரீ சுப்பையா பிள்ளைக்கு அந்தஸ்தும் உயர்ந்தது; சம்பளமும் உயர்ந்தது. திருநெல்வேலிக் கடைப்பிள்ளைகள் வரும்போதும் போகும் போதும் காட்டும் சிரத்தையால் உப வருமானமும் ஏற்பட்டது. உடை, நாட்டு வேஷ்டியிலிருந்து மல் வேஷ்டியாயிற்று. பாங்கியில் பணமும் கொஞ்சம் சேர்ந்தது. அதனுடன் அவருடைய குடும்பமும்

பெருகியது. குடும்ப 'பட்ஜட்'டில் வீட்டு வாடகை இனம் பெரும் பளுவாக இருந்தாலும் கொடுக்கும் பணத்திற்கு ஏற்ற வசதி அளிப்பதாக இல்லை.

தேச விழிப்பின் முதற் கலையான ஒத்துழையாமை இயக்கம், பின்னர் அதன் பேரலையான உப்பு சத்தியாக்கிரகம் - இவருடைய வாழ்விலோ, மனப் போக்கிலோ மாறுதல் ஏற்படுத்த வில்லை. வீரபாண்டியன் பட்டணத்தின் ஒரு சிறு பகுதியாகவே அவர் சென்னையில் நடமாடினார். ஜீவனோபாயம், பிறகு சௌகரியப்பட்டால் பிறருக்கு உதவி, சமூகத் தொடர்புகளுக்குப் பயந்து பணிதல் - எல்லாம் சேர்ந்த உருவம் ஸ்ரீ சுப்பையாபிள்ளை. காலணாப் பத்திரிகைகள் காங்கிரஸின் சக்தியை அவரிடம் கொண்டுவந்து காட்டவில்லை என்றால், பலபூக்காரத் தெரு, திருநெல்வேலி மேற்கு ரதவீதி, அப்புறம் நினைவிலிருக்கும் வீரபாண்டியன் பட்டணம் என்ற மூன்று சட்டங்களுக்குள்ளாகவே அவருடைய மனப் பிரதிமை அடங்கிக் கிடந்தது என்று வற்புறுத்துவது அவசியமில்லை.

மின்சார ரெயில் வண்டி அவருடைய வாழ்வில் ஒரு பெரிய மாறுதலை ஏற்படுத்தியது. அவர் வேலை பார்த்த கடையின் பூர்வாசிரமத்தில், அதில் பற்று வரவு நடத்திய பெங்களூர் நாயுடு, ஒரு முழு வாழ்விலும் சம்பாதித்த ஏமாற்றத்தின் சின்னங்களுடன பழையபடி சொந்த ஊருக்குப் போய்விட விரும்பினார். அவருக்குத் தாம்பரத்தில் ஒரு சின்ன வீடு இருந்தது. ஸ்ரீ சுப்பையா பிள்ளைக்கு அவருடைய வார்த்தைகள் மீது நம்பிக்கை இருந்தது. அதன் விளைவாகப் பிள்ளையவர்களுக்குத் தாம்பரம் - பீச் யாத்திரை பிரதி தினமும் லபித்தது. ஊருக்கெல்லாம் மின்சாரம் வந்தாலும் அவருக்கு அந்தப்

பழைய மண்ணெண்ணெய் (கிரோசின்) விளக்குத்தான்; குழாய் வந்தும் அவருக்குத் தாம்புக் கயிறும் தவலையுந்தாம்.

பிள்ளையவர்கள் இத்தனை காலம் வீட்டு வாடகைக்குச் செலவு செய்தது, இப்பொழுது தனக்கும் தன் மூத்த பையனுக்கும் - அவன் படிக்கிறான் - ரெயில் பாஸுக்குச் செலவாயிற்று. விடியற்காலம் கிணற்றுத் தண்ணீர் ஸ்நானம். பழையது, கையில் பழையது மூட்டை, பாஸ், வெள்ளி விபூதிச் சம்புடத்தில் உள்ள இரண்டணாச் சில்லறை - இந்தச் சம்பிரமங்களுடன் பவழக்காரத் தெருவை நோக்கிப் புறப்படுவார். இரவு கடைசி வண்டியில் காலித் தூக்குச் சட்டி, பாஸ், வெள்ளி விபூதிச் சம்புடத்தில் உள்ள இரண்டணாச் சில்லறை, பசி, கவலை - இவற்றுடன் தாம்பரத்திற்குத் திரும்புவார். 'பெண்ணுக்குக் கல்யாணம் காலா காலத்தில் செய்யவேணும். மூத்தவனுக்குப் பரீக்ஷைக்குப் பணம் கட்ட வேணும். தோற்றுப் போய் வீட்டோடு இருக்கும் சின்னவனை ஏதாவது ஒரு தொழிலில் இழுத்துவிட வேணும். நாளைக்குப் பால்காரனுக்குத் தவணை சொல்லாமல் பணம் ஏதோ கொஞ்சம், கூடக் குறையவாவது கொடுக்க வேணும்...'

பிள்ளையவர்கள் அநுட்டானாதிகள் முடித்துக் கொண்டு, சாப்பிட்டு முடித்து 'முருகா' என்று கொட்டாவி விட்டபடி திண்ணையில் சரிவதற்குமுன் மணி பன்னிரண்டாகிவிடும். இப்படியே தினந்தோறும்...

## 2

**காலை** ஏழு மணி சுமாருக்குத் திருவனந்தபுரம் 'எக்ஸ்பிரஸ்' விசில் சப்தம், 'அவுட்டர் சிக்னல்' அருகில் கேட்கும்பொழுது ஸ்ரீ சுப்பையா பிள்ளை தாம்பரம்

ஸ்டேஷன் மாடிப் படிகளில் கால் வைப்பார். எதிரில் நிற்கும் டிக்கெட் பரிசோதகன் புது ஆசாமியாக இருந்தால் பாஸை எடுத்துக் காண்பித்துவிட்டு மேலேறுவார். இல்லாவிட்டால், சிந்தனைகளுடன், படிகளில் கால் உயர்ந் தேறிச் செல்லும்; கண்கள் தெற்கு நோக்கி ரெயில் வண்டி வரும் திசையைத் துழாவும்; திருநெல்வேலியி லிருந்து தமக்குத் தெரிந்த யாரும் வந்தால் பார்க்கலாமே என்ற ஆசைதான். 'எக்ஸ்பிரஸ்' புறப்பட்ட பிறகுதான் மின்சார ரெயிலும் புறப்படும். ஆகையால் அந்த நேரத்தில், 'எக்ஸ்பிரஸ் பிளாட்பார'த்திற்குச் சென்று இரவு முழுவதும் கொசுக்களுடன் மல்லாடிய சிரமத்தைச் செங்கற்பட்டு அவசரக் காப்பியில் தீர்த்துக்கொண்ட பாவனையில் ஜன்னல் வழியாகத் தலை நீட்டுபவர்களைப் பார்ப்பதில் ஒரு நாட்டம் பிள்ளையவர்களுக்கு எப்பொழுதும் உண்டு.

இடுப்பில் நாலு முழம் மல், தோளில் ஒரு துவர்த்து, மடியில் சம்புடம் வகையறு, கையில் போசன பாத்திரம் - இந்தச் சம்பிரமங்களுடன் பிள்ளையவர்களை எப்பொழுதும் - மழையானாலும் வெயிலானாலும் பார்க்க லாம். எப்பொழுதும் ஒரு வாரமாக க்ஷவரம் செய்யாத முகம், நெற்றியில் பளிச்சென்ற விபூதி, நனைந்துலரும் தலை மயிரைச் சிக்கெடுக்கும் வலக்கை - இவைகளை நினைத்துக்கொண்டால் சுப்பையா பிள்ளையின் உருவம் வந்து நின்றுவிடும். மழைக் காலமானால் கையில் குடை ஒன்று எப்பொழுதும் விரித்துப் பிடித்தபடி போசன பாத்திரத்துடன் அதிகமாகக் காணப்படும்

தெற்கு ரதவீதி ஜவுளி வியாபாரிகள் இவரிடம் தப்பித்துக்கொண்டு நேரடியான வியாபாரம் நடத்தி விடுவது துர்லபம்; அப்படி எப்பொழுதாவது நடத்த

முயன்றிருந்தால் பிள்ளையவர்களுக்குத் தேக அசௌக்கியம், ரெயிலுக்கு வரத் தாமதமாயிற்று என்பதுதான் கணக்கு. இதனால் பிள்ளையிடம் கடை முதலாளிக்கு வெளிக்காட்டிக் கொள்ளப்படாத தனி வாஞ்சை,- 'சுப்பையா இல்லாட்டா நம்ம கையொடிஞ்ச மாருதி' என்பார் முதலாளிப்பிள்ளை. இவ்வளவிருந்தும் பண விஷயத்தில் என்னவோ அவர் வெகு கரூர்ப் பேர்வழி.

பிள்ளையவர்கள் ரெயிலில் ஏறுவதே ஒரு தினுசு. நடுமைய வண்டியில், வாசலுக்கு அருகில் உள்ள வலது பக்கத்து 'ஸீட்டில்', எஞ்சினுக்கு எதிர்ப்புறமாகத்தான் உட்காருவார். அது அவருடைய 'ஸீட்'. புறப்படுகிற இடத்தில் ஏறிக் கடைசியாக நிற்கிற இடத்தில் வந்து இறங்குகிறதால், இந்த இடத்துக்கு அவரிடம் யாரும் போட்டிக்கு வந்ததே இல்லை. வந்திருந்தாலும் முயற்சியில் வெற்றி பெற்றிருக்க மாட்டார்கள். தாம்பரத்திலிருந்து 'பீச்' வரையில் உள்ள பாக்கங்களிலும், பேட்டைகளிலும் இரண்டிரண்டு நிமிஷம் வண்டி நிற்கும்பொழுதுதான் அவருடைய நிஷ்டை கலையும். வண்டி 'பீச்' ஸ்டேஷனில் வந்து நின்றுவிட்டது என்றவுடனேயே இறங்குவதில்லை. வெளியில் இறங்கியதும் வேஷ்டியை உதறிக் கட்டிக் கொண்டபின் துவர்த்து முண்டை உதறி மேலே போட்டு விட்டு பிறகு ஜன்னல் வழியாக வண்டிக்குள் தலையையும் கையையும் விட்டு கையில் போசனப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு காலெட்டி வைப்பார், ஸ்ரீ சுப்பையா பிள்ளை. ஆர அமர மெதுவாக, சாவகாசமாக இறங்கி ஸ்டேஷனை விட்டு வெளியே போகும் கடைசிப் பிரயாணி சுப்பையா பிள்ளை. தாம்பரத்திலும் பீச்சிலும் வண்டியில் ஏறும் முதல் பிரயாணியும் அவர்தாம். அவரிடம் சொந்தமாகக் கடிகாரம் ஏதும் இல்லை. அவரே ஒரு கடிகாரம்.

அபூர்வமான புத்தி விசாலத்திற்கும் ஒத்துவராது என்று கண்ட ராமசாமிப் பத்தர், தலைமுறை தலைமுறையாகத் தம் தகப்பனார் வரையில் வந்த செங்காணி மான்மியத்தை முடித்துக்கொண்டு திருநெல்வேலிக்குச் சென்று குடியேறினார்.

முதலில் 'ஸைக்கிள்' 'கடிகாரம்' ரிப்பேரில் ஆரம்பித்து, வரவர 'மோட்டார் கண்டக்டர்', 'டிரைவர்', பிறகு 'மெக்கானிக்' என்ற பருவங்களைக் கடந்து, தமக்குத் தாமே சொந்தமாக வைத்துக்கொண்ட மோட்டார் என்ஜினீயர் என்ற பட்டத்துடன் 'ஓர்க் ஷாப்' என்ற பெயருடைய ஒரு கொல்லப் பட்டடையை ஸ்தாபித்தார்.

இந்தப் பத்து வருஷங்களில் பத்தரைக் கையில் பிடிக்க முடியாது. கையில் பணம் ஓட்டமிருந்தால் யாரும் அப்படித்தான். ஏறாத தாசி வீடு இல்லை; உடலில் வாங்காத வியாதி இல்லை.

இந்தக் காலத்தில்தான் பையன் கெட்டுப் போய் விடுவான் என்று எண்ணி அவருடைய உறவினர்கள் கல்யாணமும் செய்து வைத்தார்கள். அந்த அம்மணி மூன்று வருஷத்தில் இரண்டு பெண் குழந்தைகளைப் பத்தருக்கு ஒரு பொறுப்பாக வைத்துவிட்டுக் காலமானாள்.

உறவினர்கள், ராமசாமிப் பத்தரின் குடும்ப வாழ்க்கையில் கவலைப்பட ஆரம்பிக்கு முன்னமே 'ஓர்க் ஷாப்' அவர்கள் தடுத்துவிடலாம் என நம்பியிருந்த அந்த நிலைமைக்கு வந்துவிட்டது. எங்கே பார்த்தாலும் கடன். வேலைக்காரர் தொல்லை. வேலையும் இவர் குறித்த நேரத்தில் முடித்துக் கொடுக்க முடியாததனால் மற்றக் கம்பெனிகளைத் தேடிவிட்டன.

இந்த மாதிரி நிலைமை விரைவில் நீங்கிவிடும் என்ற நம்பிக்கையிலேயே ஒரு பத்து வருஷம் கழிந்தது.

மனிதன் ஒரு நிலைமை வரையில் தான் பொறுத்துக் கொண்டு இருக்க முடியும். தலைக்குமேல் வெள்ளம் சென்றால் ?

ஒரு சுப தினத்தில் 'ஓர்க் ஷாப்' கதவடைக்கப் பட்டது. அடைத்ததனால் அவருடைய நிலைமை மேலோங்கி விடவில்லை. 'செட்டி, இருந்தும் கெடுத்தான், இறந்தும் கெடுத்தான்' என்ற கதைதான்.

கொஞ்ச நாள், தம் வயசு வந்த பெண்களின் கதியை நோக்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டு, ஊரைச் சுற்றி வந்தார். கடன் தொல்லை, பெண்களின் பொறுப்பு, எல்லாம் சேர்ந்து அவரை, நாற்பது வயசிலேயே ஊக்கங் குன்றிய கிழவனுக்கி விட்டன. உடல் வன்மையாவது இருக்கிறதா ? பழைய சல்லாப காலங்களில் சேகரித்த 'முதல்' வீணுகப் போகவில்லை. மருந்து என்ற சிறிய தடையுத்தரவிற்குப் பயந்து இத்தனை நாட்கள் பதுங்கி யிருந்த வியாதிகள் மீண்டும் உறவாட ஆரம்பித்தன.

* * * *

'இண்டோ - யூரோப்பியன் மோட்டார் மெக்கானிகல் ஒர்க்ஸ்' முதலாளியான ராமானுஜலு நாயுடு அவருக்கு ஒரு பிட்டர் வேலை கொடுத்த பொழுது, 'அன்ன தாதா' என்று அவரை மனமாரப் புகழாமல் இருக்க முடியுமா ? நீரும் நானும் இந்த மாதிரி இரண்டு பெண் குழந்தைகளை வைத்துக்கொண்டு அதன் பொறுப்பை ஏற்றுக்கொண்டு வேலையில்லாமல் திண்டாடி யிருந்தால் அம்மா திரித்தான் புகழ்வோம்.

மாசம் 20 ரூபாய் சம்பளம். காலை 6-முதல் இரவு எப்பொழுது பட்டடை அடைக்கப்படுகிறதோ அவ்வளவு நேரமும் வேலை.

இம்மாதிரி ஒரு வருஷம் கொஞ்ச நாட்கள் சற்றுக் கவலையற்ற தரித்திரம். பொருளாதார மந்தம் என்று நீட்டி முழக்கிச் சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அடித்து விளாசுகிறார்களே, அதுவும் வந்தது. அதைப் பற்றிய தத்துவங்கள், காரணங்கள் எல்லாம், உமக்கும் எனக்கும் பத்திப் பத்தியாக நுணுக்கமாக எழுதத் தெரியும்; பேசவும் தெரியும். ராமானுஜலு நாயுடுவுக்குத் தெரிந்ததுபோல் நமக்கு ஸ்பஷ்டமாகத் தெரியாது.

ராமானுஜலு நாயுடு நல்ல குணமுள்ளவர்தாம். சில சமயங்களில் ஐந்து பத்து முன்பின் யோசியாமல் கொடுத்து உதவுகிறவர்தாம். ஆனால் பணம் சேர்ப்ப தற்குத்தான் அவர் சென்னையிலிருந்து திருநெல்வேலிக்கு வந்தாரே ஒழிய, தொழிலாளர்களுக்குத் தர்மம் செய்து புண்ணியம் சம்பாதிக்க வரவில்லை.

அவருடைய சிக்கனக் கத்தி வீழ்ந்தது. பத்துப் பேர் வெளியே போக வேண்டியிருந்தது. அதில் ராமசாமிப் பத்தரும் ஒருவர். கெஞ்சினார்கள்; கூத்தாடினார்கள். பத்து ரூபாய் - பாதி சம்பளம் - கொடுத்தால்கூடப் போதும் என்றார்கள். ராமானுஜலு நாயுடு சத்திரம் கட்ட வரவில்லையே!

நல்ல பசுமாடு இருக்கிறது. வேளைக்கு இரண்டு படி, பால் கறக்கிறது. அதற்குப் பருத்தி விதை, தீனி என்ன? ராஜயோகந்தான். கண்ணும் கருத்துமாகத்தான் கவனிக் கிறோம். மாடு கிழடாகி, வறண்டு போய்விட்டால் வைத்துக் கொண்டு கும்பிடவா செய்கிறோம்? தோலின் விலைக்காவது தள்ளிவிடவில்லையா? இதில், ராமானுஜலு நாயுடு செய்ததில் என்ன குற்றம்? அது அப்படித்தான்.

அது நியாயந்தான். இப்பொழுது அதைத் தப்பு என்று சொல்லுகிறவன் முட்டாள், பைத்தியக்காரன்.

* * * *

ராமசாமிப் பத்தருக்குச் சம்பளத்தை வாங்கிக் கொண்டு வரும்போது எதுவும் தோன்றவில்லை. நாலு நாள் சம்பளம் எத்தனை நாட்களுக்குப் போதும்? பிறகு என்ன செய்வது? வேறு எந்தக் கம்பெனியில் எடுப்பார்கள். எடுத்தாலும் அந்தக் கதிதானே! உலகமே ஓர் இதயமற்ற திருக்கூட்டம் என்று பட்டது. நெற்றிக்கண் இருந்தால் எல்லாரையும் எரித்துச் சாம்பலாக்கி யிருப்பார். இல்லாததனால் நேராகச் சாராயக் கடைக்குப் போனார்.

இனி என்ன செய்வது?

இனி என்னதான் செய்வது? எல்லாவற்றையும் தொலைத்துவிட்டுக் காவியைக் கட்டிக்கொண்டு பிச்சை எடுக்க வேண்டியதுதான். சீ! பிச்சையா? அதைப்போல் கோழைத்தனம் உண்டா? நம்மைத் திருடுகிற இந்தப் பயல்களைக் கொள்ளையடித்தால் எந்தத் தர்ம சாஸ்திரம் ஓட்டையாகப் போகிறது?

'இரவு பத்துப் பதினொரு மணிக்கு ராமானுஜலு நாயுடு தனியாகத்தான் கணக்குப் பார்த்துக்கொண்டு இருப்பார். ஒரு கை பார்த்தால்தான் என்ன?'

வீட்டிற்கு வந்து மிஞ்சி இருக்கிற சில்லறையைப் பெண்களிடம் கொடுத்தார். கொடுத்தது சாப்பிட்டது எல்லாம் மெஷின் மாதிரி. மனசு அதில் லயித்து விட்டது.

"என்ன அப்பா, இப்படி இருக்கே?" என்றதற்கு ஒன்றும் சொல்ல முடியவில்லை.

திடீரென்று இருவரையும் கட்டிச் சேர்த்து முகத்தில் மாறி மாறி முத்தமிட்டார். ஹிந்து சமுதாயத்தில் வயசு வந்த பெண்களை முத்தமிடத் தந்தைக்கு உரிமையே

இல்லை. இருவரும் திடுக்கிட்டார்கள். குடித்துவிட்டாரோ என்ற சந்தேகம். பயந்து நடுங்கினார்கள்.

"நமக்கு நல்ல காலம் வந்துவிட்டது. நாயுடு எனக்கு ஐம்பது ரூபாயில் பட்டணத்தில் வேலை பார்த்துக் கொடுத்தார். வழிச் செலவிற்குப் பணம் ராத்திரி தருகிறேன் வா என்றிருக்கிறார்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்து தமது தீர்மானத்தை நிறைவேற்றப் புறப்பட்டார்.

எதிர் பார்த்தபடி நாயுடு தனியாகத்தான் இருந்தார்.

"வா ராமசாமி, நான் என்ன செய்யட்டும், நீதான் சொல். நீ இங்கே வருவதில் பிரயோஜனமில்லை" என்றார் நாயுடு.

"எனக்கு நீங்கள் கொடுத்தது பத்தாது" என்றார் ராமசாமி. குரல் வித்தியாசமாக இருந்தது.

குடித்துவிட்டு வந்திருக்கிறானோ என்று நாயுடு சந்தேகித்து, "நீ நாளைக்கு வா" என்றார்.

"நாளைக்கா! பார் உன்னை என்ன செய்கிறேன். என் குடும்பத்தை நாசமாக்கி விட்டாயே, திருட்டு ராஸ்கல்" என்று அவர்மேல் பாய்ந்து மேஜையின்மேல் இருந்த நோட்டுக்களில் கையை வைத்தார்.

நாயுடுமட்டும் தனியாக இருந்தது உண்மைதான். அதற்காக உலகமே நடமாட்டமற்றுப் போய் விடுமா? ராமசாமி வெகுலேசாகப் பிடிபட்டார்.

நாயுடுவிற்கு அசாத்தியக் கோபம். "உண்ட வீட்டில் கெண்டி தூக்கிய பயலை விடுகிறேனா பார்" என்றார்.

விவரிப்பானேன்?

பலவந்தத் திருட்டுக் கேஸாகியது. ஆறுமாசக் கடுங்காவல்.

பத்தர் பாடு கவலையற்ற சாப்பாடு. எந்தத் தொழிலாளர் சங்கம் திருட்டுத் தொழிலாளியின் குடும்பத்திற்கு இந்த மாதிரி உதவி செய்ய முடியும்? நியாயமான உலகமல்லவா?

பெண்களின் நிலைமையைப் பற்றி எழுதக் கூசுகிறது.

ஜன்மாந்தர விதி என்ற ஒரு மகத்தான காரணத்தைக் கண்டுபிடித்த ஹிந்து சமுதாயத்தில் இது இயற்கை தானே?



# சாப விமோசனம்

[ராமாயண பரிசயமுள்ளவர்களுக்கு இந்தக் கதை பிடிபடாமல் (பிடிக்காமல்கூட) இருக்கலாம். அதை நான் பொருட்படுத்தவில்லை.]

## 1

சாலையிலே ஒரு கற்சிலை. தளர்ந்து நொடிந்து போன தசைக் கூட்டத்திலும், வீரியத்தைத் துள்ள வைக்கும் மோகன வடிவம்; ஓர் அபூர்வ சிற்பி பூலோகத்தில் இதற்காகவென்றே பிறந்து தன் கனவை யெல்லாம் கல்லில் வடித்து வைத்தானோ என்று தோன்றும் அவ்வளவு லாகிரியை ஊட்டுவது. ஆனால் அந்தப் பதுமையின் கண்களிலே ஒரு சோகம் - சொல்லில் அடைபடாத சோகம் - மிதந்து, பார்க்கிறவர்களின் வெறும் தசை ஆசையான காமத்தைக் கொன்று அவர்களையும் சோகத்தில் ஆழ்த்தியது. அது சிற்பியின்

அபூர்வக் கனவு அன்று. சாபத்தின் விளைவு. அதன்தான் அகலிகை.

அந்தக் காட்டுப் பாதையில் கல்லில் அடித்து வைத்த சோகமாக, அவளது சோகத்தைப் பேதமற்ற கண்கொண்டு பார்க்கும் துறவிபோன்ற இயற்கையின் மடியிலே கிடக்கிறாள். சூரியன் காய்கிறது. பனி பெய்கிறது. மழை கொழிக்கிறது. தூசும் தும்பும் குருவியும் கோட்டானும் குந்துகின்றன; பறக்கின்றன. தன் நினைவற்ற தபஸ்வியாக - கல்லாக - கிடக்கிறாள்.

சற்றுத் தூரத்திலே ஒரு கறையான் புற்று. நிஷ்டையில் ஆழ்ந்து தன் நினைவகற்றித் தன் சோகத்தை மறந்து தவம் கிடக்கிறான் கோதமன். இயற்கை, அவனையும் அபேதமாகத்தான் போஷிக்கிறது.

இன்னும் சற்றுத் தூரத்திலே இந்தத் தம்பதிகளின் குடும்பக் கூடு கம்பமற்று வீழ்ந்ததுபோல, இவர்களுக்கு நிழல்கொடுத்த கூரையும் தம்பம் இற்று வீழ்ந்து பொடியாகிக் காற்றோடு கலந்துவிட்டது. சுவரும் கரைந்தது. மிஞ்சியது திரடுதான். இவர்கள் மனசில் ஏறிய துன்பத்தின் வடுப்போலத் தென்பட்டது அது.

தூரத்திலே கங்கையின் சலசலப்பு. அன்னை கங்கை, இவர்களது எல்லையற்ற சோகத்தை அறிவாளோ என்னவோ!

இப்படியாக ஊழி பல கடந்தன, தம்பதிகளுக்கு.

ஒரு நாள்......

முற்பகல் சூரிய ஒளி சற்றுக் கடுமைதான். என்றாலும் கொடிகளின் பசுமையும் நிழலும், இழைந்து வரும் காற்றும், உலகின் துன்பத்தை மறைக்க முயன்று நம்பிக்கையையும் வலுவையும் தரும் சமய தத்துவம் போல, இழைந்து மனசில் ஒரு குளுமையைக் கொடுத்தன.

ஆண் சிங்கம்போல, மிடுக்கு நடை நடந்து, எடுத்த கருமம் முற்றியதால் உண்ட மகிழ்ச்சியை மனசில் 'அசை போட்டுக்கொண்டு' நடந்து வருகிறான் விசுவாமித்திரன். மாரீசனும் சுவாகுவும் போன இடம் தெரியவில்லை. தாடகை என்ற கிழட்டுக் கொடுமை நசித்துவிட்டது. நிஷ்டையில் ஆழ்ந்தும், எரியோம்பியும் தர்ம விசாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு நிம்மதியைத் தரும் சாதனமாகத் தன்னை ஆக்கிக்கொண்டதில் ஒரு திருப்தி.

அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொள்கிறான். பார்வையில் என்ன பரிவு! இரண்டு குழந்தைகள் ஓடிப்பிடித்து விளையாடி வருகின்றன. அவர்கள் வேறு யாருமல்ல; அவதார சிசுக்களான ராம லக்ஷ்மணர்களே. அரக்கர் நசிவை ஆரம்பித்து வைத்துவிட்டு, அதன் பொறுப்புத் தெரியாமல் ஓடிப் பிடித்து வருகிறார்கள்.

ஓட்டம் புழுதியைக் கிளப்புகிறது. முன்னால் ஓடி வருகிறான் லக்ஷ்மணன்; துரத்தி வருபவன் ராமன். புழுதிப் படலம் சிலையின் மீது படிகிறது....

என்ன உத்ஸாகமோ என்று உள்ளக் குதுகலிப்புடன் திரும்பிப் பார்க்கிறார் விசுவாமித்திரர். பார்த்தபடியே நிற்கிறார்.

புழுதிப் படலம் சிலையின் மீது படிகிறது.

எப்போதோ ஒரு நாள் நின்று கல்லான இதயம் சிலையுள் துடிக்கிறது. போன போன இடத்தில் நின்று இறுகிப்போன ரத்தம் ஓட ஆரம்பிக்கிறது. கல்லில் ஜீவ உஷ்ணம் பரவி உயிருள்ள தசைக் கோளமாகிறது. பிரக்ஞை வருகிறது.

கண்களை மூடித் திறக்கிறாள் அகலிகை. பிரக்ஞை தெரிகிறது. சாப விமோசனம்! சாப விமோசனம்!

தெய்வமே மாசுபட்ட இந்தத் தசைக்கூட்டம் பவித்திரம் அடைந்தது.

தனக்கு மறுபடியும் புதிய வாழ்வைக் கொடுக்க வந்த தெய்விக புருஷன் எவன்? அந்தக் குழந்தையா?

அவன் காலில் விழுந்து நமஸ்கரிக்கிறாள். ராமன் ஆச்சர்யத்தால் ரிஷியைப் பார்க்கிறான்.

விசுவாமித்திரருக்குப் புரிந்துவிட்டது. இவள் அகலிகை. அன்று இந்திரனுடைய மாய வேஷத்துக்கு ஏமாறிய பேதை. கணவன் மீதிருந்த அளவுக்குள் அடங்காத பாசத்தின் விளைவாக, தன் உடம்பை, மாய வேஷத்தால் ஏமாறி, மாசுபடுத்திக் கொண்டவள்; கோதமனின் மனைவி. அவ்வளவையும் ராமனிடம் சொல்லுகிறார். அதோ நிற்கும் புற்று இருக்கிறதே; அதில், வலை முட்டையில் மோனத்தவங் கிடக்கும் பட்டுப் பூச்சிபோலத் தன்னை மறந்து நிஷ்டையில் ஆழ்ந்து இருக்கிறான். அதோ அவனே எழுந்து விட்டானே!

நிஷ்டை துறந்த கண்கள் சாணை தீட்டிய கத்திபோல் சுருளகின்றன. உடலிலே, காயகற்பம் செய்ததுபோல் வலு பின்னிப் பாய்கிறது. மிடுக்காக, பெண்ணின் கேவலத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முடியாதவனைப் போலத் தயங்கித் தயங்கி வருகிறான்.

மறுபடியும் இந்தத் துன்ப வலையா? சாப விமோசனத்துக்குப் பிறகு வாழ்வு எப்படி என்பதை மனசு அப்பொழுது நினைக்கவில்லை. இப்பொழுதோ அது பிரம்மாண்டமான மதிளாக அவனது வாழ்வைச் சுற்றியே மண்டலிக்கிறது. அவள் மனமும் மிரளுகிறது.

ராமனுடைய கல்வி, தர்மக்கண்கொண்டு பார்த்தது. தெளிவின் ஒளி பூண்டது. ஆனால் அநுபவச் சாணையில் பட்டை பிடிக்காதது; வாழ்வின் சிக்கலின் ஒவ்வொரு

நூலையும் பின்னலோடு பின்னல் ஓடியாமல் பார்த்த வசிஷ்டனுடைய போதனை. ஆனால் சிறுமையை அறியாதது. புது வழியில் துணிந்து போக அறிவுக்குத் தெம்பு கொடுப்பது.

உலகத்தின் தன்மை என்ன, இப்படி விபரீதமாக முறுக்கேறி உறுத்துகிறது! மனசுக்கும் கரணசக்தியின் நிதானத்துக்கும் கட்டுப்படாமல் நிகழ்ந்த ஒரு காரியத் துக்கா பாத்திரத்தின்மீது தண்டனை? "அம்மா!" என்று சொல்லி அவள் காலில் விழுந்து வணங்குகிறான் ராமன்.

இரண்டு ரிஷிகளும், (ஒருவன் துணிச்சலையே அறிவாகக் கொண்டவன்; மற்றவன் பாசத்தையே தர்மத்தின் அடித்தலமாகக் கண்டவன்) சிறுவனுடைய நினைவுக்கோணத்தில் எழுந்த கருத்துக்களைக் கண்டு குதுகலிக்கிறார்கள். எவ்வளவு லேசான, அன்பு மயமான, துணிச்சலான உண்மை!

"நெஞ்சினால் பிழை செய்யாதவளை நீ ஏற்றுக் கொள்ளுவதுதான் பொருந்தும்" என்றான் விசுவா மித்திரன் மெதுவாக.

குளுமை பூண்ட காற்றில் அவனது வாதக் கர கரப்பு ரஸபேதம் காட்டுகிறது.

கோதமனும், அவன் பத்தினியும், அந்தத் தம்ப மற்றுத் திரடேறிப்போன மேடும் அவ்விடத்தை விட்டு அகலவில்லை. முன்பு உயிரற்றிருந்த இடத்தில் ஜீவகளை துவள நினைத்தது.

சாட்டையின் சொடுக்கைப் போலப் போக்கை மாற்றி யமைக்க வந்த சக்திகள் அவ்விடம் விட்டுப் பெயர்ந்துவிட்டன. மிதிலைக்குப் பொழுது சாயும் பொழுதாவது போக வேண்டாமா? மணவினை, இரு கைகளை நீட்டி அழைக்கிறதே.

கோதமனுக்கு அவளிடம் முன்போல் மனக் களங்க மின்றிப் பேச நாவெழவில்லை. அவளை அன்று விலைமகள் என்று சுட்டது, தன் நாக்கையே பொசுக்க வைத்து விட்டது போல இருக்கிறது. என்ன பேசுவது? என்ன பேசுவது?

"என்ன வேண்டும்?" என்முன் கோதமன். அறிவுத் திறம் எல்லாம் அந்த உணர்ச்சிச் சுழிப்பிலே அகன்று பொருளற்ற வார்த்தையை உந்தித் தள்ளியது.

"பசிக்கிறது" என்முள் அகலிகை, குழந்தை போல.

அருகிலிருந்த பழனத்தில் சென்று கனிவர்க்கங் களைச் சேகரித்து வந்தான் கோதமன். அன்று, முதல் முதல் மணவினை நிகழ்ந்த புதிதில் அவனுடைய செயல் களில் துவண்ட ஆசையும் பரிவும் விரல்களின் இயக்கத்தில் தேக்கத்தில் காட்டின.

'அந்த மணவினை' உள்ளப் பரிவு பிறந்த பின்னர்ப் பூத்திருந்தாலும், ஏமாற்றின் அடிப்படையில் பிறந்தது தானே! பசுவை வலம் வந்து பறித்து வந்ததுதானே!' என்று கோதமனுடைய மனசு, திசை மாறித் தாவித் தன்னையே சுட்டுக்கொண்டது.

அகலிகை பசி தீர்ந்தாள்.

அவர்கள் மனசில் பூர்ணமான கனிவு இருந்தது. ஆனால் இருவரும் இருவிதமான மனக்கோட்டைகளுக்குள் இருந்து தவித்தார்கள்.

கோதமனுக்குத் தான் ஏற்றவளா என்பதே அகலிகையின் கவலை.

அகலிகைக்குத் தான் ஏற்றவனா என்பதே கோதமனின் கவலை.

சாலையோரத்தில் பூத்திருந்த மலர்கள் அவர்களைப் பார்த்துச் சிரித்தன.

## 2

அகலிகையின் விருப்பப்படி, ஆசைப்படி அயோத்தி வெளி மதில்களுக்குச் சற்று ஒதுங்கி, மனுஷ பரம் பரையின் நெடிபடாத தூரத்தில், சரயூ நதிக்கரையிலே ஒரு குடிசை கட்டிக்கொண்டு தர்ம விசாரம் செய்துகொண் டிருந்தான் கோதமன். இப்பொழுது கோதமனுக்கு அகலிகை மீது பரிபூர்ண நம்பிக்கை. இந்திரன் மடிமீது அவள் கிடந்தால்கூட அவன் சந்தேகிக்க மாட்டான். அவ்வளவு பரிசுத்தவதியாக நம்பினான் அவன். அவளது சிற்றுதவி இல்லாவிடின் தனது தர்மவிசாரம் தவிடு பொடியாகிவிடும் என்ற நிலை அவனுக்கு ஏற்பட்டது.

அகலிகை அவனை உள்ளத்தினால் அளக்க முடியாத ஓர் அன்பால் தழைக்க வைத்தாள். அவனை நினைத்து விட்டால், அவள் மனமும் அங்கங்களும் புது மணப் பெண்ணுடையனபோலக் கனிந்துவிடும். ஆனால், அவள் மனசில் ஏறிய கல் அகலவில்லை. தன்னைப் பிறர் சந்தேகிக்காதபடி, விசேஷமாகக் கூர்ந்து பார்க்கக்கூட இடங்கொடாதபடி நடக்க விரும்பினாள். அதனால் அவள் நடையில் இயற்கையின் தன்மை மறந்து இயல்பு மாறியது. தன்னைச் சூழ நிற்பவர்கள் யாவருமே இந்திரர் களாகத் தென் பட்டார்கள்; அகலிகைக்குப் பயம் நெஞ்சில் உறையேறிவிட்டது. அந்தக் காலத்திலிருந்த பேச்சும் விளையாட்டும் குடியோடிப் போயின. ஆயிரம் தடவை மனசுக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பாடம் பண்ணிக்கொண்டு, அந்த வார்த்தை சரிதானா என்பதை நாலு கோணத்திலிருந்தும் ஆராய்ந்து பார்த்துவிட்டுத் தான் எதையும் சொல்லுவாள். கோதமன் சாதாரண

மாகச் சொல்லும் வார்த்தைகளுக்குக்கூட உள்ளர்த்தம் உண்டோ என்று பதைப்பாள்.

வாழ்வே அவளுக்கு நரக வாதனையாயிற்று.

அன்று மரீசி வந்தார். முன்னொரு நாள் ததீசி வந்தார். மதங்கரும் வாரணாசி செல்லும்போது கோதமனைக் குசலம் விசாரிக்க எட்டிப் பார்த்தார். அவர்கள் மனசில் கனிவும் பரிவும் இருந்தபோதிலும் அகலிகையின் உடம்பு குன்றிக் கிடந்தது. மனசும் கூம்பிக் கிடந்தது. அதிதி உபசாரங்கூட வழுவி விடும்போல இருந்தது. ஏறிட்டுச் சாதாரணமாகப் பார்க்கிறவர்களையும் களங்கமற்ற கண்கொண்டு பார்க்கக் கூசியது. குடிசையில் ஒளிந்துகொண்டாள்.

கோதமனுடைய சித்தாந்தமே இப்பொழுது புது வித விசாரணையில் திரும்பியது. தர்மத்தின் வேலிகள் யாவும் மனமறிந்து செய்பவர்களுக்கே. சுயப் பிரக்ஞை இல்லாமல் வழு ஏற்பட்டு, அதனால் மனுஷ வித்து முழுவதுமே நசித்துவிடும் என்றாலும், அது பாபம் அல்ல; மனலயிப்பும், சுயப்பிரக்ஞையுடன் கூடிய செயலீடுபாடுமே கறைப் படுத்துபவை. தனது இடிந்து போன குடிசையில் மறுபடியும் பிறர் கூட்டி வைத்த ஒரு தன்மையில் இருந்து கொண்டு புதிய கோணத்தில் தன் சிந்தனையைத் திருப்பி விட்டான் கோதமன். அவனுடைய மனசில் அகலிகை மாசு அற்றவளாகவே உலாவினாள்; தனக்கே அருகதை இல்லை; சாபத் தீயை எழுப்பிய கோபமே தன்னை மாசுபடுத்திவிட்டது என்று கருதினான்.

சீதையும் ராமனும் உல்லாசமாகச் சமயா சமயங்களில் அந்தத் திசையில் ரதமூர்ந்து வருவார்கள். அவதாரக் குழந்தை, கோதமனின் மனசில் லக்ஷ்ய வாலிபனாக உருவாகித் தோன்றினான். அவனது சிரிப்பும்

விளையாட்டுமே தர்மசாஸ்திரத்தின் தூண்டாவிளக்கு களாகச் சாயனம் (வியாக்கியானம்) பண்ணின. அந்த இளம் தம்பதிகளின் பந்தந்தான் என்ன? அது கோதம னுக்குத் தனது அந்தக் காலத்து வாழ்வை ஞாபகப் படுத்தும்.

அகலிகையின் மனப் பாரத்தை நீக்க வந்த மாடப்புறு சீதை. அவளது பேச்சும் சிரிப்பும், தன் மீதுள்ள கறையைத் தேய்த்துக் கழுவுவன போல் இருந்தன அகலிகைக்கு. அவள் வந்த போதுதான் அகலிகையின் அதரங்கள் புன்சிரிப்பால் நெளியும். கண்களில் உல்லாசம் உதயவொளி காட்டும்.

வசிஷ்டரின் கண்பார்வையிலே வளரும் ராஜ்ய லக்ஷ்யங்கள் அல்லவா? சரயூ நதியின் ஓரத்தில் ஒதுங்கி இரு தனி வேறு உலகங்களில் சஞ்சரிக்கும் ஜீவன் களிடையே பழைய கலகலப்பைத் தழைக்க வைத்து வந்தார்கள்.

அகலிகைக்கு வெளியே நடமாடி நாலு இடம் போவ தற்குப் பிடிப்பற்று இருந்தது. சீதையின் நெருக்கமே அவளது மனச்சுமையை நீக்கிச் சற்றுத் தெம்பை அளித்தது.

பட்டாபிஷேக வைபவத்தின்போது அயோத்திக்கு வருவதாக ஒப்புக்கொண் டிருந்தாள். ஆனால் அரண் மனைக்குள் ஏற்பட்ட உணர்ச்சிச் சுழிப்புக்குத் தான் என்ன வலிமை! ஒரே மூச்சில் தசரதன் உயிரை வாங்கி, ராமனைக் காட்டுக்கு விரட்டி, பரதனைக் கண்ணீரும் கம்பலையுமாக நந்திக்கிராமத்தில் குடியேற்றி விட்டது.

மனுஷ அளவைகளுக்குள் எல்லாம் அடைபடாத அதீத சக்தி, ஏதோ உன்மத்த வேகத்தில் காயுருட்டிச்

சொக்கட்டான் ஆடியது போல், நடந்து முடிந்து விட்டது.

வசிஷ்டர்தான் என்ன, சர்வ ஜாக்கிரதையோடு மனுஷ தர்மத்தின் வெற்றியாக ஒரு ராஜ்யத்தை ஸ்தாபிக்கக் கண்ணில் எண்ணெயூற்றி வளர்த்தார். அவருடைய கணக்குகள் யாவும் தவிடுபொடியாகி, நந்திக் கிராமத்தில் நின்றெரியும் மினுக்கு வெளிச்சமாயிற்று.

சரயூ நதிக் குடிசை மறுபடியும் தம்பமற்று விழுந்தது என்று சொல்லவேண்டும். கோதமன் தர்ம விசார மெல்லாம் இந்தப் பேய்க் காற்றில் சூறை போயிற்று. மனசில் நம்பிக்கை வறண்டு சூன்யமாயிற்று.

அகலிகைக்கோ? அவளது துன்பத்தை அளந்தால் வார்த்தைக்குள் அடைபடாது. அவளுக்குப் புரியவில்லை. நைந்து ஓய்ந்து விட்டாள். ராமன் காட்டுக்குப் போனன். அவன் தம்பியும் தொடர்ந்தான்; சீதையும் போய் விட்டாள். முன்பு கற்சிலையாகிக் கிடந்தபோது மனசு இருண்டு கிடந்த மாதிரி ஆகிவிட்டது. ஆனல் மனப் பாரத்தின் பிரக்ஞைமட்டும் தாங்க முடியவில்லை.

கருக்கலில் கோதமர் ஜபதபங்களை முடித்துக் கொண்டு கரையேறிக் குடிசைக்குள் நுழைந்தார்.

அவர் பாதங்களைக் கழுவுவதற்காகச் செம்பில் ஜலத்தை ஏந்தி நின்ற அகலிகையின் உதடு அசைந்தது.

"எனக்கு இங்கு இருப்புக் கொள்ளவில்லை. மிதிலைக்குப் போய்விடுவோமே."

"சரி, புறப்படு; சதானந்தனையும் பார்த்து வெகு நாட்களாயின" என்று வெளியே இறங்கினர் கோதமர்.

இருவரும் மிதிலை நோக்கி நடந்தார்கள். இருவர் மனசிலும் பளு குடியேறி அமர்ந்திருந்தது. கோதமர் நின்றார்.

பின்தொடர்ந்து நடந்துவந்த அகலிகையினுடைய கையை எட்டிப் பிடித்துக்கொண்டார்; நடந்தார்; "பயப்படாதே" என்றார்.

இருவரும் மிதிலை நோக்கி நடந்தார்கள்.

## 3

பொழுது புலர்ந்துவிட்டது. கங்கைக் கரைமேல் இருவரும் சென்றுகொண்டிருக்கிறார்கள்.

யாரோ ஆற்றுக்குள் நின்று கணீரென்ற குரலில் காயத்திரியைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

ஜபம் முடியுமட்டும் தம்பதிகள் கரையில் எட்டிக் காத்து நின்றார்கள்.

"சதானந்தா!" என்று கூப்பிட்டார் கோதமர்.

"அப்பா......அம்மா!" என்று உள்ளத்தின் மலர்ச்சியைக் கொட்டிக் காலில் விழுந்து நமஸ்கரித்தார் சதானந்தர்.

அகலிகை அவனை மனசால் தழுவினாள். குழந்தை சதானந்தன் எவ்வளவு அன்னியனாகி விட்டான், தாடியும் மீசையும் வைத்துக்கொண்டு ரிஷிமாதிரி!

கோதமருக்கு மகனது தேஜஸ் மனசைக் குளுமை யூட்டியது.

சதானந்தன் இருவரையும் தன் குடிசைக்கு அழைத்துச் சென்றான்.

சிரம பரிகாரம் செய்துகொள்ளுவதற்கு வசதி செய்துவைத்துவிட்டு, ஜனகனது தத்துவ விசார மண்டபத்துக்குப் புறப்படலானான்.

கோதமரும் உடன் வருவதாகப் புறப்பட்டார். மகனுக்கு அவரை அழைத்துச் செல்லுவதில் பிரியந்தான்.

நெடுந்தூரத்துப் பிரயாணமாச்சே என்று ரத்த பந்தத்தின் பரிவால் நினைத்தான். ஊழிகாலம் நிஷ்டையில் கழித்தும் வாடாத தசைக்கூட்டமா, இந்த நடைக்குத் தளர்ந்துவிடப் போகிறது? அவனுக்குப் பின் புறப்பட்டார். அவருடைய தத்துவ விசாரணையின் புதிய போக்கை நுகர ஆசைப் பட்டான் மகன்.

மிதிலையின் தெருக்கள் வழியாகச் செல்லும்போது, அயோத்தியில் பிறந்த மனத்தொய்வும் சோகமும் இங்கும் படர்ந்திருப்பதாகப் புலப்பட்டன கோதமருக்கு. அடக்கி விட்ட பெருமூச்சு, காற்றினூடே கலந்து இழைந்தது.

ஜனங்கள போகிறுர்கள், வருகிறுர்கள ; காரியங்களைக் கவனிக்கிறுர்கள் ; நிஷ்காம்ய சேவைபோல எல்லாம் நடக்கிறது ; பிடிப்பு இல்லை ; லயிப்பு இல்லை.

திருமஞ்சனக் குடம் ஏந்திச் செல்லும் அந்த யானையின் நடையில் விறுவிறுப்பு இல்லை ; உடன் செல்லும் அர்ச்சகன் முகத்தில் அருளின் குதுகலிப்பு இல்லை.

இருவரும் அரசனுடைய பட்டிமண்டபத்துக்குள் நுழைந்தார்கள். சத்சங்கம் சேறு சமுததிரமாக நிறைந் திருந்தது. இந்த அங்காடியில் ஆராய்ச்சி எப்படி நுழையும் என்று பிரமித்தார் கோதமர். அவர் நினைத்தது தவறுதான்.

ஜனகன் கண்களில் இவர்கள் உடனே தென்பட் டார்கள்.

அவன் ஓடோடியும் வந்து முனிவருக்கு அர்க்கியம் முதலிய உபசாரங்கள் செய்வித்து அழைத்துச் சென்று அவரைத் தன்பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டான்.

ஜனகனுடைய முகத்தில் சோகத்தின் சோபை இருந்தது. ஆனுல் அவன் பேச்சில் தழுதழுப்பு இல்லை ;

அவனுடைய சித்தம் நிதானம் இழக்கவில்லை என்பதைக் காட்டியது.

என்னத்தைப் பேசுவது என்று கோதமர் சற்றுத் தயங்கினார்.

“வசிட்டன் தான் கட்டிய ராஜ்யத்தில் உணர்ச்சிக்கு மதகு அமைக்கவில்லை” என்றான் ஜனகன், மெதுவாகத் தாடியை நெருடிக்கொண்டு.

ஜனகனின் வாக்கு, வர்மத்தைத் தொட்டுவிட்டது.

“உணர்ச்சியின் சுழிப்பிலேதானே உண்மை பிறக்கும்” என்றார் கோதமர்.

“துன்பமும் பிறக்கும், உணர்ச்சியைப் பயன் படுத்திக்கொள்ளத் தெரியாது போனால். ராஜ்யத்தைக் கட்டி ஆசைப்படும்போது அதற்கும் இடம் போட்டுவைக்க வேண்டும்; இல்லாவிட்டால் ராஜ்யம் இருக்காது” என்றான் ஜனகன்.

“தங்களதோ?” என்று சந்தேகத்தை எழுப்பினார் கோதமர்.

“நான் ஆளவில்லை; ஆட்சியைப் புரிந்துகொள்ள முயலுகிறேன்” என்றான் ஜனகன்.

இருவரும் சற்று நேரம் மௌனமாக இருந்தார்கள்.

“தங்களது தர்மவிசாரணை எந்த மாதிரியிலோ?” என்று வினயமாகக் கேட்டான் ஜனகன்.

“இன்னும் ஆரம்பிக்கவே இல்லை; இனிமேல்தான் புரிந்துகொள்ள முயலவேண்டும்; புதிர்கள் பல புலன்களை யெல்லாம் கண்ணியிட்டுக் கட்டுகின்றன” என்று சொல்லிக்கொண்டே எழுந்தார் கோதமர்.

மறுநாள் முதல் அவர் ஜனகன் மண்டபத்துக்குப் போகவில்லை. புத்தியிலே பல புதிர்கள் ஹிமாசலத்தைப் போல் ஓங்கி நின்றன. தனிமையை விரும்பினார்.

ஆனால் நாடிச் செல்லவில்லை. அகலிகை மனசு ஓடிந்து விடக்கூடாதே!

மறுநாள் ஜனகன், "முனீசுவரர் எங்கே?" என்று ஆவலுடன் கேட்டான்.

"அவர் எங்கள் குடிசைக்கு எதிரே நிற்கும் அசோக மரத்தடியில்தான் பொழுதைக் கழிக்கிறார்" என்றார் சதானந்தர்.

"நிஷ்டையிலா?"

"இல்லை; யோசனையில்."

"அலை அடங்கவில்லை" என்று தனக்குள்ளே மெதுவாகச் சொல்லிக்கொண்டான் ஜனகன்.

அகலிகைக்கு நீராடுவதில் அபார மோகம். இங்கே கங்கைக் கரையருகே நிம்மதி இருக்கும் என்று தனியாக உதய காலத்திலேயே குடமெடுத்துச் சென்றுவிடுவாள்.

இரண்டொரு நாட்கள் தனியாக, நிம்மதியாகத் தனது மனசின் கொழுந்துகளைத் தன்னிச்சையோடு படரும்படி விட்டு, அதனால் சுமை நீங்கியதாக ஒரு திருப்தியுடன் குளித்து முழுகி விளையாடிவிட்டு நீர் மொண்டு வருவாள்.

இது நீடிக்கவில்லை.

குளித்துவிட்டுத் திரும்பிக் குனிந்த நோக்குடன், மனசை இழைய விட்டுக்கொண்டு நடந்துவந்துகொண் டிருந்தாள்.

எதிரே மெட்டிச் சப்தம் கேட்டது. ரிஷி பத்தினிகள் யாரோ! அவர்களும் நீராடத்தான் வந்துகொண் டிருந்தார்கள். அவளைக் கண்டதும் பறைச்சியைக் கண்டதுபோல ஓடி விலகி, அவளை வெறைத்துப் பார்த்து விட்டுச் சென்றார்கள்.

"அவள்தான் அகலிகை" என்பது தூரத்தில் கேட்டது. கோதமனுக்கு அன்று அடிவயிற்றில் பற்றிக் கொண்டு பிறந்த சாபத் தீயைவிட அதிகமாகச் சுட்டன அவ்வார்த்தைகள்.

அவள் மனசு ஒரேயடியாகச் சுடுகாடுமாதிரி வெந்து தகித்தது. சிந்தனை திரிந்தது. "தெய்வமே! சாப விமோசனம் கண்டாலும் பாபவிமோசனம் கிடையாதா?" என்று தேம்பினாள்.

யந்திரப் பாவைபோல அன்று கோதமருக்கும் சதானந்தருக்கும் உணவு பரிமாறினாள். 'மகனும் அன்னியனாகி விட்டான்; அன்னியரும் விரோதிகளாகி விட்டார்கள்; இங்கென்ன இருப்பு?' என்பதே அகலிகையின் மனசு அடித்துக்கொண்ட பல்லவி.

கோதமர் இடையிடையே பிரக்ஞை பெற்றவர் போல் ஒரு கவளத்தை வாயிலிட்டு நினைவில் தோய்ந் திருந்தார்.

இவர்களது மன அவசத்தால் ஏற்பட்ட பளு சதானந்தனையும் மூச்சுத் திணற வைத்தது.

பளுவைக் குறைப்பதற்காக, "அத்திரி முனிவர் ஜனகனைப் பார்க்க வந்திருந்தார். அகத்தியரைப் பார்த்து விட்டு வருகிறார். மேருவுக்குப் பிரயாணம். ராமனும் சீதையும் அகத்தியரைத் தரிசித்தார்களாம். அவர்கள் இருவரையும், 'நல்ல இடம் பஞ்சவடி. அங்கே தங்குங்கள்' என்று அகத்தியர் சொன்னாராம். அங்கே இருப்பதாகத் தான் தெரிகிறது" என்றான் சதானந்தன்.

"நாமும் தீர்த்தயாத்திரை செய்தால் என்ன?" என்று அகலிகை மெதுவாகக் கேட்டாள்.

"புறப்படுவோமா?" என்று கைகளை உதறிக் கொண்டு எழுந்தார் கோதமர்.

"இப்பொழுதேயா?" என்றான் சதானந்தன்.

"எப்பொழுதானால் என்ன?" என்று கூறிக் கொண்டே, மூலையிலிருந்த தண்டு கமண்டலங்களை எடுத்துக்கொண்டு வாசலை நோக்கினார் கோதமர்.

அகலிகை பின் தொடர்ந்தாள்.

சதானந்தன் மனம் தகித்தது.

4

பொழுது சாய்ந்து, ரேகை மங்கிவிட்டது. இருவர் சரயூ நதிக்கரை யோரமாக அயோத்தியை நோக்கி வந்துகொண் டிருந்தார்கள்.

பதினான்கு வருஷங்கள் ஓடிக் காலவெள்ளத்தில் ஐக்கியமாகிவிட்டன. அவர்கள் பார்க்காத முனி புங்கவர் இல்லை; தரிசிக்காத க்ஷேத்திரம் இல்லை. ஆனால் மனநிம்மதி மட்டிலும் அவர்களுக்கு இல்லை.

வலுவற்றவனின் புத்திக்கு எட்டாது நிமிர்ந்து நிற்கும் சங்கரனுடைய சிந்தனைக் கோயில்போல, திடமற்றவர்களின் கால்களுக்குள் அடைபடாத கைலயங் கிரியைப் பனிச் சிகரங்களின்மேல் நின்று தரிசித்தார்கள்.

தமது துன்பச் சுமையான நம்பிக்கை வறட்சியை உருவகப்படுத்தின பாலையைத் தாண்டினார்கள்.

தம் உள்ளம்போலக் கொழுந்துவிட்டுப் புகைமண்டிச் சாம்பலையும் புழுதியையும் கக்கும் எரிமலைகளை வலம் வந்து கடந்தார்கள்.

தமது மனம்போல ஓயாது அலைமோதிக்கொண்டு கிடக்கும் சமுத்திரத்தின் கரையை எட்டிப் பின்னிட்டுத் திரும்பினார்கள்.

தம் வாழ்வின் பாதைபோன்ற மேடு பள்ளங்களைக் கடந்து வந்துவிட்டார்கள்.

'இன்னும் சில தினங்களில் ராமன் திரும்பி விடுவான்; இனிமேலாவது வாழ்வின் உதயகாலம் பிறக்கும்' என்ற ஆசைதான் அவர்களை இழுத்து வந்தது.

பதினான்கு வருஷங்களுக்குமுன் தாம் கட்டிய குடிசை இற்றுக் கிடந்த இடத்தை அடைந்தார்கள்.

இரவோடு இரவாக, குடியிருக்க வசதியாகக் கோதமர் அதைச் செப்பனிட்டார். வேலை முடியும்போது உதய வெள்ளி சிரித்தது.

இருவரும் சரயூவில் நீராடித் திரும்பினார்கள்.

கணவனுக்குப் பணிவிடை செய்வதில் முனைந்தாள் அகலிகை. இருவரது மனசும் ராமனும் சீதையும் வரும் நாளை முன்னோடி வரவேற்றது. இருந்தாலும் காலக் களத்தின் நியதியை மனசைக்கொண்டு தவிர, மற்றப்படித் தாண்டிவிட முடியுமா?

ஒரு நாள் அதிகாலையில் அகலிகை நீராடச் சென்றிருந்தாள்.

அவளுக்கு முன், யாரோ ஒருத்தி விதவை குளித்து விட்டுத் திரும்பிவந்துகொண்டிருந்தாள்; யார் என்று அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை; ஆனால் எதிரே வந்தவள் அடையாளம் கண்டுகொண்டுவிட்டாள். ஓடோடியும் வந்து அகலிகையின் காலில் சர்வாங்கமும் தரையில் பட விழுந்து நமஸ்கரித்தாள்.

தேவி கைகேயி! தன்னந்தனியளாக, பரிசனங்களும் பரிவாரமும் இல்லாமல், துறவியாகிவிட்டாளே!

குடத்தை இறக்கி வைத்துவிட்டு அவளை இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினாள். அவளுக்குக் கைகேயியின் செயல் புரியவில்லை.

"தர்ம ஆவேசத்திலே பரதன் தன்னுடைய மனசில் எனக்கு இடம் கொடுக்க மறந்துவிட்டான்" என்றாள் கைகேயி.

குரலில் கோபம் தெறிக்கவில்லை; மூர்த்தன்யம் துள்ளவில்லை. தான் நினைத்த கைகேயி வேறு; பார்த்த கைகேயி வேறு. படர்வதற்குக் கொழுகொம்பற்றுத் தவிக்கும் மனசைத்தான் பார்த்தாள் அகலிகை.

இருவரும் தழுவிய கை மாறாமல், சரயூவை நோக்கி நடந்தார்கள்.

"பரதனுடைய தர்ம வைராக்கியத்துக்கு யார் காரணம்?" என்றாள் அகலிகை. அவளுடைய உதட்டின் கோணத்தில் அநுதாபம் கனிந்த புன்சிரிப்பு நெளிந்து மறைந்தது.

"குழந்தை வைத்த நெருப்பு ஊரைச் சுட்டு விட்டால் குழந்தையைக் கொன்று விடுவதா?" என்றாள் கைகேயி.

குழந்தைக்கும் நெருப்புக்கும் இடையில் வேலி போடுவது அவசியந்தான் என்று எண்ணினாள் அகலிகை. "ஆனால் எரிந்தது எரிந்ததுதானே?" என்று கேட்டாள்.

"எரிந்த இடத்தைச் சுத்தப்படுத்தாமல் சாம்பலை அப்படியே குவித்து வைத்துக்கொண்டு சுற்றி உட்கார்ந்திருந்தால் மட்டும் போதுமா?" என்றாள் கைகேயி.

"சாம்பலை அகற்றுகிறவன் இரண்டொரு நாட்களில் வந்துவிடுவானே" என்றாள் அகலிகை.

"ஆமாம்" என்றாள் கைகேயி. அவள் குரலில் பரம நிம்மதி தொனித்தது. ராமனை எதிர்பார்த்திருப்பது பரதனல்ல; கைகேயி.

மறுநாள் அவள் அகலிகையைச் சந்தித்தபொழுது முகம் வெறிச்சோடியிருந்தது; மனசு நொடிந்து கிடந்தது.

"ஒற்றர்களை நாலு திசைகளிலும் விட்டு அனுப்பிப் பார்த்தாகிவிட்டது. ராமனைப்பற்றி ஒரு புலனும் தெரியவில்லை. இன்னும் நாற்பது நாழிகை நேரத்துக்குள் எப்படி வந்துவிடப் போகிறார்கள்? பரதன் பிராயோபவேசம் செய்யப் போகிறானும். அக்கினி குண்டம் அமைக்க ஏற்பாடு செய்து வருகிறான்" என்றாள் கைகேயி.

பரதன் எரியில் தன்னை அவித்துக் கொள்ளுவது தன்மீது சுமத்தப்பட்ட ராஜ்ய மோகத்துக்குத் தக்க பிராயச்சித்தம் என்று அவள் கருதுவதுபோல இருந்தது பேச்சு.

சற்று நிதானித்து, "நானும் எரியில் விழுந்து விடுவேன்; ஆனால் தனியாக, அந்தரங்கமாக" என்றாள் கைகேயி. அவள் மனசு வைராக்கியத்தைத் தெறித்தது.

பதினான்கு வருஷங்கள் கழித்து மறுபடியும் அதே உணர்ச்சிச் சுழிப்பு. அயோத்திக்கு ஏற்பட்ட சாபத்தீடு நீங்கவில்லையா?

அகலிகையின் மனசு -க்குத்தொக்கு இல்லாமல் ஓடியது. தனது காலின் பாபச் சாயை என்றே சந்தேகித்தாள்.

"வசிட்டரைக் கொண்டாவது அவனைத் தடை செய்யக்கூடாதோ?" என்றாள் அகலிகை.

"பரதன் தர்மத்துக்குத்தான் கட்டுப்படுவான்; வசிட்டருக்குக் கட்டுப்படமாட்டான்" என்றாள் கைகேயி.

"மனிதருக்குக் கட்டுப்படாத தர்மம், மனித வம்சத்துக்குச் சத்துரு" என்று கொதித்தாள் அகலிகை.

தன்னுடைய கணவர் பேச்சுக்குப் பரதன் ஒரு வேளை கட்டுப்படக்கூடாதோ என்ற நைப்பாசை

மறுபடியும் அயோத்தியில் துன்பச் சக்கரம் சுழல ஆரம்பித்துவிடக் கூடாதே என்ற பீதி.

கோதமன் இணங்கினன். ஆனால் பேச்சில் பலன் கூடவில்லை.

பரதனை உண்டு பலிகொள்ள அக்கினி தேவன் விரும்பவில்லை. அனுமன் வந்தான்; நெருப்பு அவிந்தது. திசைகளின் சோகம், கரை உடைந்த குதுகல வெறியாயிற்று. தர்மம் தலைசுற்றியாடியது.

வசிட்டனுக்கும் பதினன்கு வருஷங்கள் கழித்த பிறகாவது கனவு பலிக்கும் என்று மீசை மறைவில் சிரிப்புத் துள்ளாடியது

இன்ப வெறியில் அங்கே நமக்கு என்ன வேலை என்று திரும்பிவிட்டான் கோதமன்.

சீதையும் ராமனும் தன்னைப் பார்க்க வருவார்கள் என்று அகலிகை உள்ளம் பூரித்தாள். வரவேற்பு ஆரவாரம் ஓடுங்கியதும் அவர்கள் இருவரும் பரிவாரம் இன்றி வந்தார்கள்.

ரதத்தை விட்டு இறங்கிய ராமனது நெற்றியில் அநுபவம் வாய்க்கால் வெட்டி யிருந்தது. சீதையின் பொலிவு அநுபவத்தால் பூத்திரிந்தது. இருவர் சிரிப்பின் லயமும் மோக்ஷ லாகிரியை ஊட்டியது.

ராமனை அழைத்துக் கொண்டு கோதமன் வெளியே உலாவச் சென்று விட்டான்.

தன் கருப்பையில் கிடந்து வளர்ந்த குழந்தையால் சுரக்கும் ஒரு பரிவுடன் அகலிகை அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். இருவரும் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருந்தார்கள்.

ராவணன் தூக்கிச் சென்றது, துன்பம், மீட்பு எல்லாவற்றையும் துன்பக்கறை படியாமல் சொன்னாள்

சீதை. ராமனுடன் சேர்ந்து விட்ட பிறகு துன்பத்துக்கு அவளிடம் இடம் ஏது?

அக்கினிப் பிரவேசத்தைச் சொன்னாள். அகலிகை துடித்து விட்டாள்.

"அவர் கேட்டாரா? நீ ஏன் செய்தாய்?" என்று கேட்டாள்.

"அவர் கேட்டார்; நான் செய்தேன்" என்றாள் சீதை, அமைதியாக.

"அவன் கேட்டானா?" என்று கத்தினாள் அகலிகை; அவள் மனசில் கண்ணகி வெறி தாண்டவமாடியது.

அகலிகைக்கு ஒரு நீதி, அவனுக்கு ஒரு நீதியா?

ஏமாற்றா? கோதமன் சாபம் குடலோடு பிறந்த நியாயமா?

இருவரும் வெகு நேரம் மௌனமாக இருந்தனர்.

"உலகத்துக்கு நிரூபிக்க வேண்டாமா?" என்று கூறி, மெதுவாகச் சிரித்தாள் சீதை.

"உள்ளத்துக்குத் தெரிந்தால் போதாதா? உண்மையை உலகுக்கு நிரூபிக்க முடியுமா?" என்றாள் அகலிகை. வார்த்தை வறண்டது.

"நிரூபித்துவிட்டால் மட்டும் அது உண்மையாகி விடப் போகிறதா; உள்ளத்தைத் தொடவில்லையானால்? நிற்கட்டும்; உலகம் எது?" என்றாள் அகலிகை.

வெளியிலே பேச்சுக் குரல் கேட்டது. அவர்கள் திரும்பிவிட்டார்கள்.

சீதை அரண்மனைக்குப் போவதற்காக வெளியே வந்தாள். அகலிகை வரவில்லை.

ராமன் மனசைச் சுட்டது; காலில் படிந்த தூசி அவனைச் சுட்டது.

ரதம் உருண்டது; உருளைகளின் சப்தமும் ஓய்ந்தது.

கோதமன் நின்றபடியே யோசனையில் ஆழ்ந்தான். நிலைகாணாது தவிக்கும் திரிசங்கு மண்டலம் அவன் கண்ணில் பட்டது.

புதிய யோசனை ஒன்று மனக்குகையில் மின்வெட்டிப் பாய்ந்து மடிந்தது. மனச்சுமையை நீக்கிப் பழைய பந்தத்தை வருவிக்க, குழந்தை ஒன்றை வரித்தால் என்ன? அதன் பசலை விரல்கள் அவன் மனசின் சுமையை இறக்கிவிடாவா?

உள்ளே நுழைந்தான்.

அகலிகைக்கு பிரக்ஞை மருண்ட நிலை. மறுபடியும் இந்திர நாடகம், மறக்கவேண்டிய இந்திர நாடகம், மனத் திரையில் நடந்துகொண் டிருந்தது.

கோதமன் அவளைத் தழுவினான்.

கோதமன் உருவில் வந்த இந்திர வேடமாகப் பட்டது அவளுக்கு. அவள் நெஞ்சு கல்லாய் இறுகியது. என்ன நிம்மதி!

கோதமன் கைக்குள் சிக்கிக் கிடந்தது ஒரு கற்சிலை.

அகலிகை மீண்டும் கல்லானாள்.

மனச் சுமை மடிந்தது.

* * * *

கைலயங்கிரியை நாடி ஒற்றை மனித உருவம் பனிப் பாலைவனத்தின் வழியாக விரைந்துகொண் டிருந்தது. அதன் குதி காலில் விரக்தி வைரம் பாய்ந்து கிடந்தது.

அவன்தான் கோதமன்.

அவன் துறவியானான்.



## நியாயம்

தேவ இறக்கம் நாடார் – அவருக்கு வல்லின இடையினங்களைப் பற்றி அபேத வாதக் கொள்கையோ, தனது பெயரை அழுத்தமாகச் சொல்ல வேண்டும் என்ற ஆசையோ, எதுவானாலும் அவர் எப்பொழுதாவது ஒரு தடவை இந்த 'டமிலில்' எழுதுவது போலவே எழுதி விடுவோம். நல்ல கிறிஸ்தவர். புரோட்டஸ்டாண்ட், (Protestant) ஸர்கில் சேர்மனாக இருந்து, மிஷனில் உபகாரச் சம்பளம் பெற்று வருபவர். இந்த உலகத்திலே கர்த்தருடைய நீதி வழங்கப் பெறுவதற்காகப் பாடு பட்டதனால் ஏற்படப்போக இருக்கும், இந்த உலகத்தின் பென்ஷனை எதிர்பார்த்திருக்கிறார்.

ராஜ பக்தியும், சமூக சேவையும் ஒத்துவராத இந்தக் காலத்தில், மரியாதையாகச் சமூக சேவை என்று சொல்லப்படும் தமது பெஞ்சு மாஜிஸ்திரேட் பதவியில் கொஞ்சம் பெருமையுண்டு. ஒரே கல்லில் இரண்டு காக்கை யடித்தால் பெருமையடைய மாட்டார்களா? அவரும் மனிதன் தானே?

அவருடைய மதபக்தி, ராஜ பக்தியுடன் போட்டி யிடும். ஞாயிற்றுக்கிழமை வரத் தவறினாலும், அவர் கடவுளால் கொடுக்கப்பட்ட அந்த ஓய்வு நாளில் கோவிலில் போய் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் இருக்கமாட்டார். சில சமயம் பால்ராஜ் ஐயர் அவர்கள், ஓர் இருபதாம் நூற்றாண்டு இந்திய யோவான் ஸ்நானகனைப்போல், "ஏ! விரியன் பாம்புக் குட்டிகளே! உங்கள் பாவங்களை ஒப்புக் கொள்ளுங்கள்.

உங்கள் பாவங்களை மன்னிக்கும்படி, கர்த்தராகிய ஏசு கிறிஸ்துவின் வழியாக, அந்த மனுஷ குமாரன் வழியாக, பரமண்டலங்களில் இருக்கும் பிதாவை முழங்கால் படியிட்டு வேண்டிக் கொள்ளுங்கள். ஏ! விரியன் பாம்புக் குட்டிகளே!......" என்று உற்சாகமாக பிரசங்கிக்கும் பொழுது, தமது அருமை மேரிக் குஞ்சு முதல், அங்கு வந்திருக்கும் வெள்ளைக்கார பிஷப் உள்பட எல்லாம் இரட்டை நாக்குகளை நீட்டிக்கொண்டு நெளிவதுபோல் போல் தோன்றும். வெகு உருக்கமாக மன்றாடுவதற்காகக் கண்களை இறுக மூடிக் கொள்வார். அவ்வளவு மதபக்தி. பைபிலை இந்த உலகத்துக்கே சரியான ஓர் இந்தியனின் பீனல் கோடாகவே மதித்தார். சமணரைக் கழுவேற்றிய தாக மார் தட்டிக் கொள்ளும் திருவாளர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்குக் கூட அவ்வளவு இருக்குமோ என்னவோ?

அன்று கோர்ட்டில் கூட்டம் எப்பொழுதும்போல். நியூஸென்ஸ் சார்ஜ், லைசென்ஸ் இல்லாத குற்றம், சின்னத் திருட்டு 'பெரிய' விவகாரங்களுக்குப் பிள்ளையார் சுழி, சின்னக்கடன், இத்யாதி.

பஞ்சபாண்டவர் மாதிரி இருந்த அந்த மாஜிஸ்திரேட்டுகள், வெகு ஊக்கமாக நியாயத்தை நிறுத்துப் பறிமாறிக்கொண் டிருந்தார்கள். கடைசியாக ஒரு கேஸ்தான் அப்பா!

ஒரு S. P. C. A. இன்ஸ்பெக்டர். அவர் பிடித்த கேஸ், காயம்பட்ட குதிரையைக் கட்டி ஓட்டியதாக.

இன்ஸ்பெக்டர் பாடம் ஒப்புவிப்பது போல் அந்தக் காயம்பட்ட குதிரையையும் வண்டிக்காரனையும் பிடித்த விதத்தையும் விரிவாகக் கூறிவிட்டு இறங்கினார்.

தேவ இறக்கம் நாடாருக்கு இந்த அநியாயமான குற்றத்தைக் கேட்டவுடன் தாங்கமுடியாத கோபம். இனிமேல் இம்மாதிரி நடக்காதபடி ஒரு 'முன்மாதிரி' யாகத் தண்டிக்க வேண்டும் என்று நினைத்துவிட்டார்.

"யா! ஓம்பேரென்ன!

"சொள்ள முத்துப் புள்ளெ."

"சொள்ளமுத்து இண்ணு சொல்லுமேவே. புள்ளை என்ன புள்ளை! கூண்டிலெ ஏறுணப்ப? நீரு புண்ணுப் போன குருதையெ வண்டிலே மாட்டலாமா? என்ன மரங்கணக்கா நீக்கிராவே; ஓமக்கு புத்தியில்லே? வாயில்லாச் சீவனை; ஊமையாகவே! என்ன நிக்கிரா?"

"தரும தொரைகளே! எங்குருதயெ புள்ளமாருதி வளக்கேன். வவுத்துக் கொடுமை; இல்லாட்டாகே நாம் போடுவனு சாமி? இனிமேலே இப்பிடி நடக்காதுசாமி. ஒருதவை, தருமதொரைக மன்னிக்கணும்."

"நல்லாச் சொன்னிரு! வேலையத் நுப் போயாவே நாங்க இங்கெடந்து பாக்கம்? 5 ரூபா அவராதம்; தவறினு ஒரு மாசம். சரிதானே......அப்புறம்" என்று மறுபக்கம் திரும்பினர்.

சுடலை முத்துப் பிள்ளை ஆவேசம் கொண்டவன் போல் ஓடிவந்து காலைப் பிடித்துக்கொண்டு, "தரும துரைகளே! இந்த ஒரு தடவை மன்னிக்கணும். புள்ளெ குட்டி வவுத்துலே அடியாதிங்க......"

"பின்னலே போ சாத்தானே!" என்று தேவ இறக்கம் நாடார் கர்ஜித்தார். கோர்ட் ஆர்டலி, சுடலை முத்துப் பிள்ளையை இழுத்துக்கொண்டு வெளியே போனன்.

இரவு, தேவ இறக்கம் நாடார் படுத்துக் கொள்ளுமுன் முழங்கால் படியிட்டு ஜபம் செய்கிருர்.

"பரமண்டலங்களில் இருக்கும் எங்கள் பிதாவே! உமது நாமம் பரிசுத்தப் படுவதாக. உம்முடைய ராஜ்யம் வருவதாக. உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப் படுகிறதுபோல பூமியிலேயும் செய்யப்படுவதாக. எங்களுக்கு வேண்டிய அப்பத்தை அன்றன்று எங்களுக்குத் தாரும். எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னியும்: நாங்களும் எங்களிடம் கடன் பட்டவர்களுக்கும் மன்னிக்கிறோமே......ஆமென்!"

கண்ணை விழித்து எழுந்தார். அந்த அஞ்ஞானி வண்டிக்காரனைப்பற்றி ஞாபகமேயில்லை!

✲

# கட்டிலை விட்டிறங்காக் கதை

[நான் பாளையங்காலில் குளித்துக்கொண்டிருக்கும் போது சில ஏடுகள் மிதந்து வந்தன. உடம்பைத் தேய்த்துக் கொண்டிருந்தவன், அவற்றை எட்டி எடுத்துக் கவனித்துப் பார்க்க, கதைமாதிரி தெரிந்ததால், கிடந்தவை எல்லாம் சேகரித்து வாசித்தேன். தெரிந்தது இந்தக் கதைதான். இந்த ஏட்டுக்கு ஆதாரமோ, நான் சாக்கிரதைக் குறைவாக மிதக்கவிட்டு விட்ட கதையின் முற்பகுதியோ இனிமேல் கிடைக்காதாகையால், இது விக்கிரமாதித்தன் கதை யென்று வழங்கும் கதைகளில் இதுவரையில் வெளிவராத பாடம் என்பதுடன் இவ்வாராய்ச்சியை முடித்துக் கொள்ளுகிறேன். தெரிந்தவர்கள் தொடர்க.]

முத்துமோகனவல்லிப் பதுமை என்ற முப்பத்தேழாவது பதுமை சொல்லிய

## கட்டிலை விட்டிறங்காக் கதை

* * * நேம நிஷ்டைகள் செப தபங்கள் யாவும் முடித்து, பார்ப்பனர்களுக்கும் பரிசனங்களுக்கும் கோதானம், பூதானம், வஸ்திரதானம் யாவும் குறைவறக்

ஏடு சிதிலமானதால் எழுத்துத் தெளிவாகத் தெரிய வில்லை.

கொடுத்து, தம் மந்திரிப் பிரதானிகள் சூழ, தோகையர் பல்லாண்டிசைப்ப ஜாம் ஜாமென்று கொலுமண்டபத்திலே புகுந்தருளி, சிங்காதனத்துக்கு அபிடேக ஆராதனைகள் யாவும் முடிப்பித்து, போச மகாராசனானவன் அந்தச் சிங்காதனத்திலே ஏறி அமர்வதற்காகக் காலடி வைப்பானாயினன். முப்பத்தேழாவது படியின்மீது அவன் கால் நிழல் பட்டவுடன் முத்துமோகன வல்லிப் பதுமை என்ற முப்பத்தேழாவது பதுமை அட்டகாசமாய்ச் சிரித்து....வாரீர் போச மகாராசரே, உமக்கு இந்தச் சிங்காதனம் அடுக்குமோ, இது விக்கிரமாதித்த ராசாவானவர், பட்டி என்கிற மந்திரியோடு, காடாறு மாதமும் நாடாறு மாதமுமாய் அறுபத்திராயிரம் வருஷம் வரை, மனு நெறி தவறாது, புலியும் புல்வாயும் ஓரிடத்துறையும் பெற்றி வழுவாது, அபேதமாக, அபூர்வமாக அட்டமா திக்குகளையும் கட்டியாண்டு, மூட்டைப் பூச்சிக்கும் முறைமை வழுவாது நடந்தமை அறியீரோ! அந்த மகாராசனுடைய கீர்த்தி வல்லபங்களிலே ஆயிரத்தில் ஒரு பங்காவது உமக்கு உண்டோ எனக் கை மறித்தது. போசமகாராசனும், 'ஓகோ இதேது! அதிசயமாகத் தோணுது! மூட்டைப் பூச்சிக்கும் முறைமை வழுவாத செங்கோலாவது!' என அதிசயித்து, அன்று இரவு தான், நடுச்சாமத்திலே, பேயும் உறங்கும் நள்ளிரவிலே, தன் பட்ட மகிஷியானவள் சப்ரமஞ்சத்திலே, தாதியர் சிலர் வீசவும், சிலர் பனிநீர் தெளிக்கவும் உறக்கம் செய்யும் சமயத்திலே ஓஹோ வெனப் பதைத்தபடி, ஊர்ப் பேய் பிடித்தவள் போலவும், உன்மத்தம் கொண்டவள் போலவும் கூக்குரலிட்டோலமிட, தான் வீரவாள் எடுத்து, அந்தக் கிருகத்தில் அந்த நேரத்தில் ஆரோகணித்துப் பிரவேசித்து, "என்

பட்டத்து ராணியே, பாக்யவல்லியே, நாட்டின் குலக் கொழுந்தே, என்ன உனக்குச் சம்பவித்தது?'' என்று கேட்டும் பதில் வராததனால், கட்டிலைத் தடவி, மூட்டை யொன்று விழித்து நிற்கக் கண்டு, கட்டைவிரலால் நசுக்காமல், கட்கத்தினால் கொன்ற சேதி நினைவுக்கு வர திகைத்துப் பதைத்து அருகில் நின்ற மந்திரி சுமந்திரனை விளித்து, ''மூட்டையைக் கொன்றதற்குப் பிராயச்சித்தம் உண்டா? மூட்டைக்கு மனு நெறி உண்டா? சொல்லும், சொல்லும்'' என்று கேட்க, மந்திரி சுமந்திரனானவன், ஏதேது, நம் தலைக்குத் தீம்பு வந்ததென்று திட்டப் படுத்திக்கொண்டு தெண்டனிட்டு, ''ராச்சிய பாரத்திலே பலவித முண்டு தேசந்தோறும் *ராசமும் மாறும்; கையில் வெண்ணெய் வைத்து நெய்க்கு அழுவாருண்டோ? இப்போர்க்கொத்த அதிசயங்களையும் சொலற்கொத்த அதிமோகனப் பதுமை இருக்கும் போது, பறையறைந்து, பார்ப்பனர்களைக் கூட்டுவித்துச் சாஸ்திர விசாரம் செய்து தேவரீர் திரு நேரத்தை வீணுக்குவாருண்டோ? நான் சுமந்திரனல்லவா? அப்போர்க்கொத்த ஆலோசனை சொல்லுவேனோ?'' என்று தலைவணங்கி நின்றான். ''சவாசு, சவாசு, மந்திரி சுமந்திரனாரே! நீர் சொன்னது ஆயிரத்துக்கு ஒரு வார்த்தை! அதைத் தெரிந்துதானே, நாம் உமக்கு மந்திரிப்பதவி தந்தோம்? இந்தாரும் உம் புத்திக் கூர்மைக்கு மெச்சியும், நம் சந்தோஷத்தைத் தெரிவித்தும், தருகிறோம் இந்த முத்து மாலையை. அதை நீரே நேரே சென்று நும்முடைய பத்தினிக்குக் கொடுத்துவப்பீர்'' என்று கட்டளை யிட்டுவிட்டுப் பதுமையைப் பார்த்து, ''வாராய் முத்துமோகனவல்லிப் பதுமையே, உங்கள்

---

*ராசம என்ற சொல், ராசசியபார முறையைக் குறித்த வழக்கொழிந்த பிரயோகம் போலும்.

விக்கிரமாதித்தன் மூட்டைப் பூச்சிக்கு முறைமை வழுவாது நடந்தமை சொன்னீரே; அதன் வயணமென்ன?'' என்று குத்துக்கால் போட்டு, குடங்கையிலே மோவாயை ஊன்றிக் குனிந்து நின்று கேட்டான். அதற்கு அந்த முத்துமோகனப் பதுமையானது, "விக்கிரமாதித்த ராசா கதை என்றால் வீடுகதையா விட்டுச்சொல்ல; பொட்டென்று மறக்க? நீர் இந்தப் படியில் இப்படி அமரும்; நான் சொல்லுகிறேன். காது கொடுத்துக் கேளும். இடையிலே கொட்டாவி விட்டால், நட்டாற்றில் சலபானம் பண்ணியவன் பாவம் வந்து சம்பவிக்கும்.........

[இதிலிருந்து பத்து ஏடுகளைக் காணவில்லை.]

......லே, நாமகள் திலதம் போலும், நாரணன் நாபி போலும், அட்டகோண யந்திரத்தின் மையக்கோட்டை போலும், செம்பாலும் இரும்பாலும் கல்லாலும் கருத்தாலும் கட்டிய நகரம் ஒன்றுண்டு. அதற்குப் பகைவர்கள் வரமாட்டார்கள். பாவம் அணுகாது. பசியும் அணுகாது. அதன் கோட்டை வாசலோ எண்ணூறு யானைகளை வரிசையாக நிறுத்தினாலும், அதன் பிறகும் ஒரு பாகம் இடம் கிடக்கும். அந்தக் கோட்டைக் கதவுகள் வயிரத்தினால் ஆனவை. இரவில் கோடி சூரியப் பிரகாசம் போலச் சுடர்விட்டு, நூற்றிருபது காதத்துக்குப் பகைவர்கள் வந்தாலும் காட்டிக் கொடுத்துவிடும்; பட்டப் பகலிலோ என்றால், அவர்கள் கண்களைக் கூசவைத்துப் பொட்டையாக்கித் திக்குத் தெரியாமல் அலைந்து, முதலைகளும், சுறா மீன்களும், எங்கே, எங்கே என்று நடமாடும் அகழிக்குள் விழுந்து, தம் ஆயுசைப் போக்கும்படி செய்விக்கும். இப்பேர்க்கொத்த கோட்டை வாசலை உடைத்தாயிருக்கிறதனாலே, இந்தப் பட்டணத்துக்கு மாந்தை,

மாந்தை என்று பெயர். கேளாய் விக்கிரமார்க்க அரசனே, இதற்கு இன்னும் ஒரு காரணமும் சொல்லுவார்கள். இந்தப் பட்டணத்து மாந்தர்கள், மன்னர் இட்ட கட்டளையை மறவாது, மறையாது, ஒழுகி வந்ததனுல், மந்தைபோல் நடக்கும் மாந்தர் வாழ் சாந்தமாம் நகர் இச் செகதலத்திலுண்டோ? நீர் ஒரு முறை வாரும், அந்த ஊரைப் பாரும். தேவலோகத்து அளகாபுரியும், குபேர பட்டணமும், பூலோகத்து அத்திஞபுரியும் அதற்கு ஈடாகா. அதில் இல்லாதன இல்லை என்ருல் முற்றும் உண்மை, முக்காலும் உண்மை. அந்தப் பட்டணத்திலே, முந்தையோர் வரம்பின் முறைமை வழுவாது, மனு நெறி பிசகாது, மன்னவனும் தென்னவனுக் கிளேயான் இணையாரமார்பன், அஜமுகன் என்பான் அரசாட்சி செலுத்திவந்தான். அவனுக்கு ஐம்பத்தாருயிரம் பத்தினி மாரும், அதற்கு இரட்டிப்பங்கு வைப்பாட்டிமாரும் உண்டு. அந்த ஐம்பதிஞயிரவரில், அவனுடைய கண்ணுக்குக் கண்ணுக, கட்டிக் கரும்பாக, நகத்திற்குச் சதையாக, பூவுக்கு மணமாக, பத்தினிப் பெண்களிலே பதுமினிப் பெண்ணுய், கண்ணுல் பார்க்கவும் மயக்கம் போடும் மோகலாகிரி தரும் அஜமுகி என்பவள் ஆசைக் குகந்த பட்ட மகிஷி. வாஞ்சைக் குகந்த வஞ்சிக்கொடி யாளுக்குப் பிள்ளேயே பிறக்காமல், சிங்காதனச் சிறப்புக்கு ஆண் வாரிசே அளிக்கமாட்டேன் என்று தெய்வங்கள் யாவும் ஒன்றுகூடிச் சங்கற்பித்தது போலவும் பட்ட மகிஷியின் பேரிளம்பெண் பருவத்தையும் வெகு துரிதத்தில் ஓட்டி விரட்டி யடித்துக்கொண்டு போவான் போல, காலதேவன், நாட்களே வாரங்களாகவும் வாரங் களேப் பட்சங்களாகவும் பட்சங்களே மாதங்களாகவும் மாதங்களேப் பருவமாகவும் பருவங்களே வருஷங்களாகவும்

நெருக்கிக் கொண்டுவரவும், வயிற்றுக்குப் பாரமாகப் பிறந்த வைப்பாட்டிப் பிள்ளைமார்கள் நாள் தவறாமல் படித் தரம் பெற்றுப்போக, பட்டி மண்டபத்தில் முட்டி மோது வதைக் கண்டு ஆறாச் சினமும் அளவிலாப் பக்தியும் கொண்டவனாகி, அதிவீர சூர பராக்கிரம கேதுவான அஜமுகன் என்ற செகதலம் புகழும் மகிபதி, அவனியில் உள்ள சாத்திரவிற்பனர்கள் யாவரையும் கூட்டுவித்து, 'ஐயன்மீர்! கடையேன் கடைத்தேற ஒரு வழி அருளல் வேண்டும்' என்று விண்ணப்பித்துக் கொள்ள, சகல கலாவல்லபனும், அட்டமாசித்தியில் கெட்டிக்காரனுமான சித்தவல்லப சிரோன்மணி யொருவன் சபாமண்டலத்தே எழுந்தருளி நிமிர்ந்து நின்று, "புவித்தலம் முழுதும், கவித்தொரு குடைக்கீழ், செவித்தலம் தன்னிற் பவத்துயர் கேளாது செங்கோல் நடாத்தும் அங்கண்மா ஞாலத்து அதிவீர மன்னா, நம் சயனக்கிருகத்தில், வடதிசை கிடக்கும் சப்ரமஞ்சக் கட்டிலின் சாபமே நுமக்குப் பிள்ளைப் பேறு வாயாதது; கட்டிலை அகற்றி, கானகத்தின் கீழ்த் திசையில் கருங்காலியும் சந்தனமும் பின்னிப் பிணைந்து வளர்ந்து நிற்கிறது; அதை வெட்டிக் கட்டிலாக்கிக் கால் நீட்டிப் படுத்தால், பத்தாம் மாதம் ஆண் மகவு நிச்சயம்" என்று சொல்லி நிற்க, அத்துறவிக்குப் பசிப்பிணி போக்க மடமும் மான்யமும் கொடுத்து, சைத்தியோபசாரம் செய்விக்கச் சேடிப் பெண்கள் அறுநூற்றுவரையும் உடனனுப்பினான். பிறகு முரசறைவித்து, 'காட்டிலே கருங்காலியும் சந்தனமும் கட்டித் தழுவி வளர்ந்த மரத்தைக் கொண்டு வந்து தருவோருக்கு ஆயிரம் பொன் பரிசு' என்று பரிசனங்களிடையே சொல்லச் சொல்லி, தச்சர்கள் யாவரையும் அழைப்பித்துக் கட்டில் செய்ய ஆணையிட்டான். காட்டிலிருந்து மரமும் வந்தது.

கட்டிலும் செய்து முடித்தார்கள். அப்பொழுது தான் அரசே, நாங்கள் இருவரும் அந்தக் கட்டிலின் குறுக்குச் சட்டத்தின் கீழ் ஈசான திசையில் இருந்த சிறு பொந்தில் குடிபுகுந்தோம் விக்கிரமாதித்த மன்னா, வெற்றிவேல் அரசே, நாங்கள் காலெடுத்து வைத்த நேரம், காலன் கரிக்கோடு போட்ட நேரம் போலும்! — என்று அந்தப் பெட்டை மூட்டைப்பூச்சி ரெட்டைச் சொட்டுக் கண்ணீர் சிந்திவிட்டு, பட்டியைப் பார்த்துப் பெருமூச்சுவிட்ட விக்கிரமார்க்க மகாராசாவை நோக்கித் தன்னுடைய துயரக் கதையைத் தொடர்ந்து சொல்லலாயிற்று :

தச்சன் வீட்டுத் தடுக்கின் இடுக்கில் பசிக்கு வேளா வேளை எதுவும் கிடைக்காமல், தச்சக் குழந்தைகளின் ஆள்காட்டி விரலுக்கும் கட்டை விரலுக்கும் பயந்து, நித்திய கண்டம் பூர்ண ஆயுசுமாகத் தவித்து வரும் நாளில், சந்தனக் கருங்காலி சப்ர மஞ்சக் கட்டில் அதிர்ஷ்டம், எங்களுக்குத் தந்த பேருபகாரமாக, தெய்வம் கொடுத்தவரமாக, எங்களை வாழ்வித்தது. பிறகு கேட்பானேன்? மன்னா, மல்லிகை மொக்கும், பனிநீர்ச் சந்தனமும், பக்குவமான ராச ரத்தமுமே எங்களுக்குக் கிடைத்துவந்தன. என் கண்ணுக்குக் கண்ணாளரும் மூட்டை வம்ச மன்மதனுமான என்னுடைய கட்டழகன், கருநாவற்பழம் போலும், காட்டீச்சைப் பழம் போலும், முதிர்ந்து கனிந்த களாப் பழம் போலும், மேனி பொலிந்து, வண்ணம் மிகுந்து, நடை நிமிர்ந்து என் உயிரைக் கொள்ளை கொண்டதுடன், மாந்தை நகர் மூட்டைக்கதிபதி காட்டு வீரப்பன் என்ற விருதெடுத்து அண்டாண்ட புவனங்களையும் கட்டியாண்டார். கோவணாண்டிகள் குபேரபட்டணத்து வாரிசாகப் போன கதையாக நாங்கள் புகுந்து விட்டாலும், தெய்வம்

கொடுத்த திருவரத்தால் நியம நிஷ்டைகள் பிறழாது, ஆசார சீலம் அகலாது வாழ்ந்துவரும் நாளில், ஒரு நாள் என் கணவர் முகம் சோர்வுற்று, நலங்குலைந்து, முடுக்கில் ஒண்டிக் கிடந்ததைக் கண்ணுற்று, "மூட்டைக்கரசா, என் ஆசைக்குகந்த ஆணழகா, கவலை என்ன?" என்று கால் பிடித்துக் கேட்டேன். அதற்கு அவர், "என் பத்தினிப் பெண்ணே அருந்ததியே, புத்திரப் பேறு வாய்க்காவிடில் நம்முடைய ராச்சியம் சீரழிந்து கெட்டுக் குட்டிசுவராகப் போகுமே. க்ஷேத்திராடனம் செய்வோமா, தீர்த்த விசேடம் தெரிசித்து வருவோமா என்று கருதுகிறேன்" என்றார். நான் அதற்கு, "அரசே, நேற்றிரவு நான் பரியாற்றப் பவனி சென்றபோது பட்டமகிஷி, மன்னவன் தங்கபஸ்பம் உண்டதனால் உள்ள அருங் குணங்களை வர்ணித்துக்கொண் டிருந்தாள். நீர் போய், மன்னவன் துடையில் நாலுமிடறு ரத்தம் பருகிவாரும். பிறகு யோசிப் போம்" என்றேன். என் கணவரும் என் புத்திக்கு மெச்சி, "கெட்டி கெட்டி! நீ யொருத்தியே, இந்த ராச்சியத்திலே எனக்கு ஏற்ற பட்டமகிஷி. இனிமேல் எனக்கு மந்திரி ஏன், தந்திரி ஏன்?" என்று என்னைக் கட்டித் தழுவிவிட்டு வெளியே சென்றார். நானும் என் வாயில் திருடிக் கொணர்ந்த சந்தனத்தைப் பூசி, வாசனையிட்டு அலங்கரித்து என் மன்மதனார் வரவுக்காகக் காத்திருந்தேன். கணப் பொழுது கழிந்ததோ இல்லையோ, என் கணவனார் பகை யரசரைக் கண்ட பட்டாளம் போலும், மந்திரவாதியைக் கண்ட தந்திரப் பேய்போலும் திடுதிடு என்று ஓடிவந்தார். நானோ பதறிப்போய் என்ன என்ன என்று பயந்து அவரைக் கட்டித் தழுவிக் கொண்டேன். "பெண்ணே, என் பதுமினிக் கண்ணே! பதறாதே. பெண் புத்தி கேட்பவன் பின் புத்திக்காரன் என்று சொல்லுவார்கள்.

அது வாஸ்தவமாகப் போய்விட்டது. ஆனால் உன் தாலிப் பாக்கியத்தால் நான் இன்று தப்பிப் பிழைத்தேன். நீ பத்தினி என்பதற்கு இது ஒன்றே போதும். முதலில் நம் ராச்சியபாரத்துக்கு ஒரு மந்திரியை நாளைக் காலையிலேயே அமர்த்தி வைத்துவிட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும்'' என்றார். "அது இருக்கட்டும், அரசே! நாளை விஷயம் நாளையல்லவா கவனிக்க வேண்டும்; இன்னும் நாளை வர நாழிகை எத்தனையோ கிடக்கிறதே. நடந்த கதை என்ன இப்பொழுது சொல்லலாமே?'' என்று நான் கேட்டேன்.

அதற்கு அவர், "இப்பொழுது நான் போன நேரம், சகுனப்பிழையோடு, நேரங்கெட்ட நேரமுமாகும். கண்ணை மூடிக்கொண்டு போகவேண்டியதாகிப் போச்சு. என்னடா கர்மகாண்டம் என்று பகவத் கீதையில் நாலு சுலோகத்தை உச்சரித்துக் கொண்டே காலிருக்கும் இடம் என்று நினைத்துக்கொண்டு உத்தேசமாகச் சென்று கடித்தேன். அது பிருஷ்டபாகம். என்னவோ சுருக்கென்றதே என்று மன்னன் எழுந்திருக்க, நான் சற்று விலகாமற் போயிருந் தால் நசுங்கியே போயிருப்பேன். மன்னன் அசங்க, மகாராணி கைகளைக் கட்டிலிலே ஊன்றினாள். அவளுடைய மோதிரத்துக் கிடையில் ஏறி ஒளிந்து கொண்டேன். பிறகு மன்னனும் ராணியும் கட்டிலைத் தேடுதேடென்று தேடினார்கள். அவர்கள் இருந்த நிலையை என்னால் பார்க்க முடியாமல் கண்களை மூடிக்கொண்டே காயத்திரி ஜபித்துக்கொண்டு இருந்தேன். பிறகு கட்டிலில் உட்கார்ந்து கொண்டு சல்லாபமாகப் பேசு கையில், 'மூட்டையாக இருக்கும்' என்றாள் பட்டத்து ராணி. அதற்குக் கீர்த்தி வாய்ந்த அந்த மகிபதியானவன், 'பெண் புத்தி என்பது பின் புத்தி' என்ற ஆன்றோர்

வாக்கு உன் விஷயத்தில் முற்றும் பொருந்தும். சகதலம் தாங்கும் மகிபதி கட்டிலில், பட்டமகிஷிக்குத்தான் இடமுண்டே. யல்லாமல், மூட்டைப்பூச்சிக்கு இடம் உண்டா? விவரம் தெரியாமல் பேசுகிறாயே! அதிருக் கட்டும் இந்த மாதம் மாதவிடாய் நின்றுவிட்டதா?' என்று கேட்டான். அதற்கு அவள், 'அரசர்க்கு அரசே, தாங்கள் சொல்லுவது என் விஷயத்தில் முற்றும் பொருந்தும். நான் பெண்தானே? இருந்தாலும், மாதவிடாய் குறித்துத் தாங்கள் கேட்டது அவசரப்பட்ட கேள்வி. கட்டில் வந்து இருபத்தைந்து நாளும் பதினெட்டு நாழிகையுந்தான் கழிந்திருக்கின்றன; அதற்குள் எப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும்?' என்று சொல்லிக்கொண்டே கட்டிலில் மீண்டும் கைகளை ஊன்றினாள். நான் இதுதான் சமயம் என்று தப்பி ஓடி வந்து விட்டேன் என்றுசொல்லி விட்டு, நெற்றியில் வடிந்த வியர்வையை ஆள்காட்டி விரல் கொண்டு வடித்து, 'சொட்டு' தரையில் முத்துப் போல் விழுவதைப் பார்த்துக்கொண் டிருந் துவிட்டு, "என் அருமைக் கதிர்ப்பச்சையே. என் ஆட்சியின் அணிகலனே. நெஞ்சு 'படக்குப் படக்கு' என்று அடித்துக் கொள்ளு கிறது. உன் மடியில் தலையைச் சற்றுச் சரிக்கிறேன்" என்று படுத்துக்கொண்டார். நான், வெளியே உலாவச் சென்றிருந்தபோது திருடி எடுத்துக்கொண்டு வந்திருந்த பனிநீர் தெளித்து வீசினேன். கண்ணயர்ந்தாற்போல் படுத்திருந்தார். எனக்கோ, அவர் ரத்த பானம் பண்ணி ஞரா, தங்கபஸ்பம் கலந்த ரத்தம் எப்படி இருக்கிறது என்று கேட்டுத் தெரிந்துகொள்ள ஆவல். மெதுவாக அவரை உசுப்பிக் கேட்க, என் மூட்டைக்கு அதிபதி சொல்லுவார்:

"கேட்டாயோ பத்தினியே, ரத்தம் உண்டது நினை விருக்கிறது. ஆனால் ருசி நினைவில்லை; பயத்தில் மறந்தே

